

# ஈரோடு அரசு அருங்காட்சியகக் கையேடு
# (Guide to the Government Museum, Erode)




ஆசிரியர்

முனைவர் **வே. ஜெயராஜ்**, எம்.எஸ்ஸி., எம்.ஏ., பிஎச்.டி

(முன்னாள் ஈரோடு அருங்காட்சியகக் காப்பாட்சியர்)

காப்பாட்சியர், வேதியியல் பாதுகாப்புப் பகுதி,

அரசு அருங்காட்சியகம், சென்னை-600008.


**விலை : ரூ. 15**

# ஈரோடு அரசு அருங்காட்சியகக் கையேடு

(Guide to the Government Museum, Erode)

ஆசிரியர்

**முனைவர் வே. ஜெயராஜ்,** *எம்.எஸ்ஸி., எம்.ஏ., பிஎச்.டி.,*

*காப்பாட்சியர், வேதியியப் பாதுகாப்புப் பிரிவு,*

*அரசு அருங்காட்சியகம், சென்னை - 600 008.*

புதிய தொடர்ச்சி - பொதுப்பகுதி - வேதியியப் பாதுகாப்பு, தொகுதி 5, 1997.



*வெளியிடுவோர் :*

*அருங்காட்சியகங்களின் ஆணையர்*

*அரசு அருங்காட்சியகம், சென்னை - 600 008.*

*ஏப்ரல், 1997*

# பொருளடக்கம்

# அணிந்துரை

**கண். தீனதயாளன்,** இ.ஆ.ப.,
அருங்காட்சியகங்களின் ஆணையர்

அரசு அருங்காட்சியகம்
சென்னை - 600 008.
தேதி : 4.3.97

'அருங்காட்சியகம்' என்றதும் நமது கண்முன் வருவது நமது நாட்டின் வளம், வரலாறு, பண்பாடு, அறிவியல், கலை போன்றவையாகும். கிரேக்க மொழியில் அருங்காட்சியகத்திற்கு இணையான சொல் "Mousein" ஆகும். இதன் பொருள் அறிவுத் தேவதையின் இருப்பிடம் என்பதாகும். வெனிசு நகரில் முதல் அருங்காட்சியகம் 1523 ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. இலண்டனிலுள்ள லேம்பர்த் பகுதியில் ஜான்டிரேடெஸ்கன்ட் என்ற தோட்டாக்காரரும் அவரது மகனும் ஒரு அருங்காட்சியகத்தை பொதுமக்களின் பார்வைக்காக 1625-ஆம் ஆண்டு தொடங்கினர். லூவர் அருங்காட்சியகம், பிரிட்டீசு அருங்காட்சியகம், மெட்ரோபாலிட்டன் அருங்காட்சியகம் போன்ற பெயர் பெற்ற அருங்காட்சியகங்கள் இன்று உலகில் பல பகுதிகளில் மக்களின் கண்களுக்கும் மனதிற்கும் அறிய விருந்தாக அமைந்து செயல்பட்டு வருகின்றன.

இந்திய வரலாற்றில் தொன்று தொட்டே அருங்காட்சியகங்கள் செயல்பட்டு வந்துள்ளன. கோயில்கள், சித்திரசாலைகள் போன்றவை இப்பணியைச் செய்துவந்துள்ளன. அரசர்கள் தங்கள் அரண்மனைகளை அருங்காட்சியங்களாகவே செயல்படுத்தியுள்ளனர். இந்தியாவில் அருங் காட்சியகம் என்ற நவீன அமைப்பில் கல்கத்தாவிலுள்ள இந்திய அருங்காட்சியகம் முதலாவது 1814 ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. 1851-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட சென்னை அருங்காட்சியகம் உலகளவில் சிறந்த அருங்காட்சியகங்களில் ஒன்றானதும், இந்திய மாநில அருங்காட்சியகங்களில் பழமையானதும் பெரியதுமாகும். இது பல்லாயிரக்கணக்கான அரும் பொருட்களைக் கொண்டுள்ள ஒரு பல்நோக்கு அருங்காட்சியகமாகும்.

தமிழ்நாடு வரலாறு, பண்பாடு, கலை, அறிவியல் வளங்களுடையது. தமிழ்நாட்டின் தலைமை அருங்காட்சியகத்தை தமிழக மக்கள் அனைவரும் கண்டுகளிக்க ஏதுவாக இருந்தாலும் பாமர மக்கள் வந்து பார்வையிடுவது சற்றுச்சிரமமானது. எனவே, மாவட்டத்திலுள்ள கிராமமக்களும் நமது பண்பாடு,

கலை, வரலாறு முதலியவற்றை அறிந்து கொள்ளும் நோக்கோடு மாவட்டந்தோறும் அருங்காட்சியகங்கள் என்ற திட்டத்தை நமது அரசு கொண்டு வந்ததின் காரணமாக இன்று 12 மாவட்டங்களில் 12 அருங்காட்சியங்களும் சென்னையில் ஒரு அருங்காட்சியகமாக மொத்தம் 13 அருங்காட்சியகங்கள் செயல்பட்டு வருகின்றன. அவற்றுள் ஈரோடு அருங்காட்சியகம் ஆறாவதாகும். இது 1987 - ஆம் ஆண்டு செப்டம்பர் 7-ஆம் நாள் ஈரோடு நகராட்சி அலுவலக வளாகத்தில் ஒரு பல்நோக்கு அருங்காட்சியகமாகத் தொடங்கப்பட்டு செயல்பட்டு வருகிறது.

பார்வையாளர்கள் அனைவரும் ஈரோடு அருங்காட்சியகத்தைப் பார்வையிடும் போதே அருங்காட்சியகத்திலுள்ள அரும்பொருட்கள் வழி மாவட்டத்தின் சிறப்புகளை அறிந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கோடு ஈரோடு அருங்காட்சியகம் தொடங்கப்பட்ட காலத்தில் ஈரோடு காப்பாட்சியராக இருந்த முனைவர் வே. ஜெயராஜ் (இன்றைய சென்னை அருங்காட்சியக வேதியியப் பாதுகாப்புப் பகுதி காப்பாட்சியர்) இக்கையேட்டினை எழுதியுள்ளார். இவருக்குப் பின்னால் பணியாற்றிய திரு. ம. மோகன் மற்றும் தற்போது பணியாற்றிவரும் திரு. அ. பெரியசாமி ஆகியோரது பங்கும் குறிப்பிடத்தக்கது. இதுவே இத்துறை வெளியிடும் முதல் தமிழ் கையேட்டு நூல் ஆகும். இதனை எழுதியுள்ள முனைவர் வே. ஜெயராஜ், திரு. ம. மோகன் மற்றும் திரு. அ. பெரியசாமி, ஆகிய காப்பாட்சியர்களின் பணியைப் பாராட்டுவதோடு இன்னும் பல்வேறு படைப்புகளை அவர்கள் கொண்டு வர வாழ்த்துகிறேன். இக்கையேடு பார்வையாளர்கள் அனைவருக்கும் மிகவும் பயனுள்ளதாக இருக்கும் என நம்புகிறேன்.

சென்னை - 8.
நாள் : 4.3.1997

(கண். தீனதயாளன்)

# ஆசிரியர் உரை

ஈரோடு அருங்காட்சியகக் காப்பாட்சியராக நான் பணியாற்றியபோது பல்வேறு அரும்பொருட்களைச் சேகரிப்பதில் ஈடுபட்டிருந்த நான் அவைப் பற்றி மக்கள் அறிய வேண்டி ஒரு கையேடு தயாரிக்க விரும்பியதால் இக்கையேடு 1989லேயே எழுதி முடிக்கப்பட்டது. ***"ஈரோடு அரசு அருங்காட்சியகக் கையேடு"*** எழுத ஊக்கமுட்டிய முன்னாள் அருங்காட்சியகங்களின் இயக்குநர் திரு. என். ஹரிநாராயணா அவர்களுக்கும், கையேட்டுக்குச் செய்திகளைக் கொடுத்தும் அவற்றைத் திருத்தங்கள் செய்தும் உதவி புரிந்த சென்னை அரசு அருங்காட்சியக துணை இயக்குநர் முனைவர் நே. தேவசகாயம், முன்னாள் உதவி இயக்குநர்கள் முனைவர் எ. ஜார்ஜ் ஜேசுதாசன், முனைவர் வ.ந. சீனிவாச தேசிகன், முன்னாள் காப்பாட்சியர்கள் திரு. அ.க. ஆதிகேசவன், செல்வி இரா. இந்திரா, முனைவர் நீ. சங்கரநாராயணா, காப்பாட்சியர்கள் திரு. பா. ஜவகர், திருமதி இரா. சாந்தி, திருமதி. ம.ந. புஷ்பா, திரு. ஜே.ஆர். அசோகன், திரு. க. இலக்குமிநாராயணன், காப்பாட்சியர், அரசு அருங்காட்சியகம், சேலம் அவர்கட்கும் கையேட்டினைப் படித்து திருத்தம் செய்து கொடுத்த பேராசிரியர் கா. அரங்கசாமி, பேராசிரியர் க.ஆ. திருஞானசம்பந்தம் அவர்களுக்கும், கையேட்டினை தட்டச்சு செய்து தந்த திருமதி. உஷாராணி, தமிழ்வளர்ச்சித் துறை, பெரியார் மாவட்டம் அவர்களுக்கும், புதிய அரும்பொருட்கள் குறித்த செய்திகளைச் சேர்த்து இக்கையேடு வெளியிடப்பட பல்வேறு முயற்சிகள் மேற்கொண்ட முன்னாள் ஈரோடு அருங்காட்சியகக் காப்பாட்சியரும் இந்நாள் சென்னை அருங்காட்சியக வளர்கலைக்கூடக் காப்பாட்சியருமான திரு. ம. மோகன், இந்நாள் ஈரோடு அருங்காட்சியகக் காப்பாட்சியர் திரு. அ. பெரியசாமி மற்றும் திருவாளர்கள் மு. ஜஹரூருல்லா, அ. அங்கமுத்து, எஸ். சக்கரை, எம். தர்மசீலன், ச. பெருமாள், எஸ். சிங்காரம், எம். ஜெயக்குமார் ஆகிய ஈரோடு அருங்காட்சியகப் பணியாளர்களுக்கும் நன்றி தெரிவிக்கப்படுகிறது. அருங்காட்சியகத் துறையிலிருந்து பல்வேறு நூல்கள் வெளியிடப்பட வேண்டுமென்று செயலாற்றுகிற அருங்காட்சியகங்களின் ஆணையர் திரு. கண். தீனதயாளன், இ.ஆ.ப., அவர்களின் உற்சாகமும் நடவடிக்கையுமே இந்நூல் வெளியிடப்பட மூல காரணமாகும். அவருக்கு எனது உளமார்ந்த

நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இக்கையேடு வெளிவர ஒத்துழைத்த புகைப்படப் பிரிவு, அச்சுப் பிரிவு, அலுவலகப் பணியாளர்கள், மற்றும் வேதியியப் பாதுகாப்புப் பிரிவு பணியாளர்கள் திரு. ஜே.டி. ஜெகநாதன், திரு. பா. சரவணன் ஆகியோருக்கும் பயிற்சியாளர்களுக்கும், திருவாளர்கள் க்ரியேட்டர்ஸ் கணிப்பொறி அச்சுக்கோப்பாளர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை - 600 008,
தேதி : 26.2.1997.

**வே. ஜெயராஜ்**
காப்பாட்சியர்
வேதியியப் பாதுகாப்புப் பிரிவு

# முகவுரை

அருங்காட்சியகம் (Museum) என்பது அறிவுத் தேவதையின் இருப்பிடம் என்னும் பொருள்படக் கூடிய கிரேக்க வார்த்தையிலிருந்து உருவான ஒரு தொடராகும். அழிந்து கொண்டிருக்கும் நமது கலை, வரலாறு, பண்பாட்டுச் சின்னங்களைப் பேணிப் பாதுகாத்து, அவற்றைப் பற்றிய அறிவை மக்களுக்கு ஊட்டுவதே அருங்காட்சியகத்தின் தலையாய நோக்கம்.

பெரியார் மாவட்டத் தலைமையிடமான ஈரோடு நகரின் மையத்திலுள்ள நகராட்சி அலுவலக வளாகத்தில் அமைக்கப்பட்டுள்ள அரசு அருங்காட்சியகம் பெரியார் மாவட்ட அரும்பொருட் செல்வங்களைச் சேகரித்து, பெரும்பாலான வற்றை அருங்காட்சியகத்தில் மக்களின் காட்சிக்காக அமைத்து, பொது மக்களின் பார்வைக்காக 7.10.87-ல் தொடங்கி வைக்கப்பட்டது.

அருங்காட்சியகம், ஈரோடு ஒரு பல்நோக்கு அருங்காட்சியகமாகும். இது தமிழ்நாடு அரசு அருங்காட்சியகத்துறையின் கீழ் உள்ள 12 அருங்காட்சி யகங்களில் ஒன்றாகும். இங்கு தொல்பொருளியல், மானிடவியல், நாணயவியல், கலை, புவியியல், விலங்கியல், தாவரவியல், தொடர்பான பொருட்கள் மற்றும் ஓவியங்கள், சுவடிகள், கல்வெட்டுக்கள் போன்றவை காட்சியில் இடம்பெற்றுள்ளன. அவற்றைப் பற்றிய சிறு குறிப்புகள் பொருட்களுடன் இடம் பெற்றுள்ளன. ஆயினும் பார்வையாளர்கள் காட்சிப் பொருட்களை சிறந்த ஆர்வத்தோடு கண்டுகளிக்கும் வண்ணமும் ஆய்வாளர்களுக்கும், ஆசிரியர்களுக்கும், மாணவர் களுக்கும் உதவிடும் வண்ணமும் இச்சிறிய அருங்காட்சியகக் கையேடு எழுதப் பட்டுள்ளது.

**அருங்காட்சியகம் பற்றிய சில செய்திகள்**

அருங்காட்சியகம் வெள்ளி, இரண்டாம் சனி மற்றும் தேசிய விடுமுறை நாட்கள் தவிர மற்ற நாட்களில் காலை 9.30 மணி முதல் மாலை 5 மணி வரை இயங்குகிறது.

அருங்காட்சியகத்திலுள்ள புத்தகங்கள் மற்றும் ஓலைச் சுவடிகளை ஆய்வாளர்கள், ஆசிரியர்கள் மற்றும் மாணவர்கள் முன் அனுமதி பெற்றபின் அருங்காட்சியகத்தில் பயன்படுத்தலாம்.

விளக்கிக்கூறும் பணி தொழில்நுட்ப உதவியாளரால் வழங்கப்படும்.

அருங்காட்சியக வெளியீட்டுப் புத்தகங்கள் அருங்காட்சியக அலுவலகத் திலிருந்தும் தொழில் நுட்ப உதவியாளரிடமிருந்தும் பெறலாம்.

# அரசு அருங்காட்சியகம், ஈரோடு

தமிழ்நாட்டின் தலைநகரான சென்னையில் அமைந்துள்ள அரசு அருங்காட்சியகம் மாநில அரசினால் ஏற்படுத்தப்பட்டுள்ள அருங்காட்சியகங்களில் பழமையானதும் பெரியதுமாகும். இது மாநிலத்திலுள்ள எல்லா மக்களும் எளிதில் வந்தடையாதபடி தலைநகரில் அமைந்துள்ளதால் ஒவ்வொரு மாவட்டத்திலுள்ள மக்களும் நாட்டின் பல பகுதிகளிலிருந்து வரும் பயணிகளும் அந்தந்த மாவட்டத்தின் கலை, பண்பாடு, மற்றும் வரலாற்றுச் சின்னங்களைக் கண்டுகளிக்க வேண்டும் என்கிற நோக்கோடு அரசு அருங்காட்சியகத் துறையின் மூலம் தமிழக அரசு மாவட்டந்தோறும் அரசு அருங்காட்சியகங்களை அமைத்து வருகிறது. அத்தகைய அருங்காட்சியகங்களில் இது ஆறாவதாகும்.

**அமைவிடம்**

கிழக்குத் தீர்க்க ரேகை 77.8-ம் வடக்கு அட்சரேகை 11.4ம் சந்திக்கும் இடத்தில் ஈரோடு உள்ளது. ஈரோட்டின் மையப் பகுதியாகிய பிரப் சாலையிலுள்ள நகராட்சி அலுவலக வளாகத்தின் மேற்குப் பகுதியிலுள்ள ஒருமாடிக் கட்டடத்தில் இந்த அருங்காட்சியகம் அமைந்துள்ளது. இதன் பரப்பு 1240 சதுர அடியாகும்.

**அருங்காட்சியகத்தின் தன்மையும் நோக்கமும்**

இந்தியாவில் 400-க்கும் மேற்பட்ட அருங்காட்சியகங்கள் உள்ளன. அவை மைய அரசு, மாநில அரசு, பல்கலைக் கழகம், கல்வி நிறுவனம், தனியார் நிறுவனம் அல்லது தனியாரால் நிர்வகிக்கப்பட்டு வருகின்றன. அவை பல்நோக்கு, சிறப்பு அருங்காட்சியகங்களாக இருக்கின்றன. அரசு அருங்காட்சியகம், ஈரோடு ஒரு பல்நோக்கு அருங்காட்சியகமாகும். இந்த அருங்காட்சியகம் அரும்பொருட்களை சேமித்து, மக்களுக்குக் காட்சிக்கு வைத்து, மக்களுக்கு அறிவூட்டும் மையமாகவும் ஆராய்ச்சி நிறுவனமாகவும் செயல்படுகிறது. இங்குப் பெரியார் மாவட்டத்தின் பொதுத் தகவல்கள், தொல் பொருளியல், நாணயவியல், மானிடவியல், வரலாறு, வரலாற்றுக்கு முற்பட்ட காலப்பொருட்கள், புவியியல், தாவரவியல், விலங்கியல் சம்பந்தப்பட்ட காட்சிப் பொருட்கள் மற்றும் ஓவியங்கள் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.



மதுரை வீரன் (கற்சிற்பம்)
வெள்ளோடு, ஈரோடு வட்டம்
கி. பி. 18-ஆம் நூற்றாண்டு



வீரக்கல், புலியுடன் சண்டை
கி. பி, 16-ஆம் நூற்றாண்டு
ஊராட்சிக் கோட்டை, பவானி வட்டம்

**அருங்காட்சியக முகப்பு**

அருங்காட்சியக முகப்பில் ஒரு சிறிய தோட்டம் அமைந்துள்ளது. இங்கு இம்மாவட்டத்திலுள்ள கொடிவேரி என்ற இடத்தில் சேகரிக்கப்பட்ட குலோத்துங்க சோழர் காலத்திய கல்வெட்டுக்களும் 8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கன்னட மன்னர்களின் கல்வெட்டுக்களும், பர்கூர் மற்றும் தாளவாடி மலைப் பகுதிகளிலிருந்து சேகரிக்கப்பட்ட வீரக்கற்களும் அமைக்கப்பட்டுள்ளன. விஜய நகர மன்னர்கள் கால ஆண் கற்சிற்பம் ஒன்றும் பெண் சிற்பம் ஒன்றும் வருவோரை வரவேற்பதுபோல் அமைக்கப்பட்டுள்ளன.

## பெரியார் மாவட்டக் கூடம்

17.9.79-ல் கோவை மாவட்டத்திலிருந்து பிரித்துத் தமிழகத்தின் 16-வது மாவட்டமாக அமைக்கப்பட்டது தான் பெரியார் மாவட்டம். 8170 சதுர கிலோ மீட்டர் பரப்பளவு கொண்ட இம்மாவட்டம் 3996 குக்கிராமங்களையும், 510 வருவாய்க்கிராமங்களையும், 343 ஊராட்சிகளையும், 61 பேரூராட்சிகளையும், 20 ஊராட்சி ஒன்றியங்களையும், 5 நகராட்சிகளையும், ஒரு நகரியத்தையும் கொண்டது.

மயக்கும் மதுரை ஒருபுறம், தொழில் வளம் கொழிக்கும் கோவை ஒருபுறம், வளர்ச்சியில் திகைப்பூட்டும் திருச்சி மறுபுறம், பழஞ்செழுமையால் சிறக்கும் சேலம் இன்னொருபுறம்; இவைதான் இம்மாவட்டத்தின் எல்லைகள். இது கொங்கு நாட்டின் ஒரு பகுதியாகும். அந்தி இளங்கீரனார், உலகடத்துக் கந்தரத்தனார், குடவாயில் கீரத்தனார், மூலங்கீரனார், பவணந்தி முனிவர், அடியார்க்கு நல்லார், பெருந்தலைச் சாத்தனார், காக்கைப் பாடினியார், பொன்முடியார் போன்ற அறிஞர் பெருமக்களும்; கொடுமுடி, தோயன் மாறன், பழையன், புன்துறை, விச்சிக்கோ போன்ற வள்ளல்களும்; தீரன் சின்னமலை பகுத்தறிவுப் பகலவன் பெரியார் போன்றோரும் வாழ்ந்த இடங்கள் இம் மாவட்டத்திலேயே அமைந்துள்ளன.

ஈரோடு, அந்தியூர், ஊதியூர், ஊராட்சிக்கோட்டை, ஓடாநிலை, சத்தியமங்கலம் போன்ற இடங்களில் கோட்டைகள் இருந்து அழிந்து போயின.

ஈரோடு, ஈஸ்வரன் கோயில், மகிமாலீஸ்வரர் கோயில், கொடுமுடி சிவன்கோயில், பவானி சங்கமேஸ்வரர் கோயில், சென்னிமலை முருகன்

கோயில், பாரியூர் அம்மன் கோயில், சிவன்மலை முருகன்கோயில் பன்னாரி அம்மன் கோயில், தேவர்மலை ஈஸ்வரன் கோயில், விஜயமங்கலம் ஜைனர் கோயில், சீனாபுரம் பூந்துறை ஜைனர் கோயில்கள், தாளவாடியிலுள்ள திப்பு காலத்திய மசூதி, ஈரோட்டிலுள்ள பிரப் நினைவாலயம் ஆகியவை பழமையும், சிறப்பும் வாய்ந்தவை. நூற்றுக்கணக்கான சிறிய சிறிய கோயில்கள் பெரியார் மாவட்டம் முழுவதிலும் காணப்படுகின்றன. இவற்றில் பெரும்பாலானவை புகைப்படங்களாக காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

பவானிசாகர் அணை மோயாறும், பவானியும் கலக்கும் இடத்திற்குச் சமீபத்தில் குறுக்காகக் கட்டப்பட்டுள்ளது. இது சுதந்திர இந்தியாவில் கட்டப்பட்ட முதல் மண்ணணையாகும். கோபிக்கு அருகிலுள்ள நஞ்சராயனால் கட்டப்பட்ட கொடிவேரி அணை வரலாற்றுச் சிறப்புடையதாகும். அந்தியூருக்குச் சமீபத்திலுள்ள வரட்டுப்பள்ளம் அணை, பர்கூர் மலை, சத்தியமங்கலத்திலுள்ள காடுகள் யானைகளின் புகலிடமாக அமைந்துள்ளது. ஈரோட்டிலுள்ள வ.உ.சி. பூங்காவிலுள்ள நீர்த்தேக்கம் சிறந்த கட்டட அமைப்புடையது.

அரச்சலூரிலுள்ள மலையில் பொறிக்கப்பட்ட இசைக்கல்வெட்டு 2000 ஆண்டுகளுக்கு முற்பட்டதாகும். இது சமணர்களின் சொத்து. விஜயமங்கலத்தில் உள்ள நெடுங்கோபுரம் இன்றும் சமணர்களின் சிறப்பை எடுத்துக்காட்டி நிற்கிறது. திங்களூர், பூந்துறை, வெள்ளோடு, சீனாபுரம், அரசண்ணாமலை, தாயம்பாளையம், கரந்தை, வெட்டுக்காட்டு வலசு போன்ற இடங்களில் இன்றும் கூடச் சமணர் காலத்துக் கலைச் செல்வங்கள் எஞ்சி நின்று சாட்சி பகருகின்றன.

## தொழில் வளர்ச்சி

**கைத்தறி**

தமிழகத்திலுள்ள 5.5 லட்சம் கைத்தறிகளில், பெரியார் மாவட்டத்தில் மட்டும் 60,250 கைத்தறிகள் உள்ளன. இங்கு ஸ்கிரீன் பிரிண்டிங் முறையில் வண்ண அச்சு வேலைப்பாடுகள் நிறைந்த லுங்கிகளும், சேலைகளும், விரிப்புகளும் அதிக அளவில் தயாரிக்கப்படுகின்றன. ஈரோட்டிலும், சென்னிமலையிலும் படுக்கை விரிப்புகளும், டவல்களும், பவானியில் ஜமுக்காளமும் தயாரிக்கப்பட்டு அவை இந்திய அளவில் தரமானவைகளாக, வியாபாரச் சந்தையில் விலை



ஈரோடு அரசு அருங்காட்சியக முகப்பு



சிற்பக்கூடத்தின் ஒரு பகுதி

போவதோடு, மேலை நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. பவானி ஜமுக்காள வகைகள் காட்சியில் இடம் பெற்றுள்ளன.

**விவசாயம்**

கீழ்பவானி அணையும், காவிரியும் இருப்பதால் விவசாயம் சிறந்து விளங்குகிறது. மஞ்சள் உற்பத்தியில் பெரியார் மாவட்டம் முன்னிலை வகிக்கிறது.

**தோல் பதனிடுதல்**

ஈரோடுக்கு அடுத்துள்ள அக்ரஹாரம் பகுதியில் ஏராளமான தோல் பதனிடும் தொழிற்சாலைகள் உள்ளன.

**கைத்தொழில்**

இம்மாவட்டத்தில் இரத்தினக்கற்கள் அதிகம் கிடைப்பதால் பட்டைதீட்டும் தொழில் காங்கயம் பகுதியில் நடைபெறுகிறது.

மரச்சிற்பம் செய்தல், உலோகச் சிற்பம் செய்தல், சுட்ட மண் பொருட்கள் செய்தல், பேப்பர் மஸ்ஸி வேலை செய்தல் போன்றவை தொன்றுதொட்டு நிலவி வருகிறது. பெரிய அளவிலான மண் குதிரைகள் செய்தல் இம்மாவட்டச் சிறப்பாகும். கஸ்தூர்பா கிராமத்திலிருந்து பெறப்பட்ட மண்பொம்மைகள் காட்சியில் இடம் பெற்றுள்ளன.

## சிற்பக் கூடம்

சிற்பக்கலை பல்லவர் காலத்தில் சிறப்புற்றிருந்தது. கொங்கு நாட்டின் ஒரு பகுதியாகிய பெரியார் மாவட்டத்தில் சேர, சோழ, பாண்டியர்களின் ஆட்சி நடைபெற்றது. எனவே, இங்கு சோழர் காலத்திய கோயில்கள் சிறந்து விளங்குகின்றன. இன்று காணப்படும் கற்சிற்பங்கள் அந்நாளைய கலைத்திறனை விளக்கி நிற்கின்றன. பெரும்பாலானவை கருங்கற் சிற்பங்களே. மேலும், ஜம்பை, பெரியபுலியூர், தாராபுரம் போன்ற இடங்களில் வெங்கலச் சிற்பங்கள், வெங்கல மணிகள் போன்றவை கிடைத்துள்ளன. மடவிளாகம், திங்களூர், தேவர்மலை போன்ற இடங்களில் மரத்தால் செய்யப்பட்ட தேர்களும் உள்ளன. இக்கலைச் சிறப்பை எடுத்துக் காட்டும் வகையில் கல் சிற்பங்கள், மரச்சிற்பங்கள், படிமங்கள் சிற்பக் கூடத்தில் இடம்பெற்றுள்ளன.

# கல் சிற்பங்கள்

**தட்சிணாமூர்த்தி**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 341/87 |
| இடம் | : | இராக்கினாம் பாளையம் கோபி வட்டம், பெரியார் மாவட்டம். |
| காலம் | : | கி.பி. 12-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 87 செ.மீ. |
| | | அகலம் : 37 செ.மீ. |
| | | கனம் : 30 செ.மீ. |

தட்சிணாமூர்த்தி கல் ஆலமரத்தின் அடியில் உட்கார்ந்த நிலையில் மேல் வலது கையில் பாம்பும், இடது கையில் தீப்பிழம்பும், கீழ் வலது கை சின் முத்திரையுடனும், இடது கை வேதத்தை வைத்திருப்பது போலவும், வலது காலை இடது முழங்காலில் மடக்கி வைத்தும் இடது கால் பாதம் முயலகனை மிதித்தும், பாதங்களில் சமீபத்தில் ஜனகாதி முனிவர்கள் நால்வர் இருப்பது போலவும் அமைந்துள்ளது.

**கணேசர்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 286/87 |
| கிடைத்த இடம் | : | தாராபுரம், பெரியார் மாவட்டம். |
| காலம் | : | கி.பி. 10-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 37 செ.மீ. |
| | | அகலம் : 35 செ.மீ. |
| | | கனம் : 20 செ.மீ. |

கணேசர் கற்சிற்பம் செம்பழுப்பு நிறமுடையது. நான்கு கரங்கள். தும்பிக்கை இடது கீழ்க்கையைத் தொடுவது போல அமைந்த காட்சி.

**காளி**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 8/88 |
| கிடைத்த இடம் | : | கொடுமுடி, ஈரோடு வட்டம். |
| காலம் | : | 13-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 51 செ.மீ. |



சிவன் (கருங்கல்)
கி. பி. 18-ஆம் நூற்றாண்டு
பெரும்பள்ளம் ஓடை, ஈரோடு.



தட்சிணாமூர்த்தி (கருங்கல்)
கி. பி. 12-ஆம் நூற்றாண்டு,
இராக்கினாம் பாளையம், கோபி வட்டம்

அகலம் : 70 செ.மீ.
கனம் : 13 செ.மீ.

வெள்ளைக்கல்லால் ஆனது இச்சிற்பம். மார்பகத்திற்குக் கீழ் உள்ள பகுதி காணப்படவில்லை. வலது மேல்கையில் குத்தும் பாணியில் தலைகீழாக திரிசூலத்தைப் பிடித்தும், வலது கீழ்க்கையில் உடுக்கையை பிடித்தும், இடது மேல்கையில் நாகத்தைப் பிடித்தும் அமைந்துள்ள காட்சி. ஜுவால கேசத்துடன் கோரைப் பற்கள் வெளியே தெரியும்படியும் உள்ளன.

**வீரக்கல்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 68/87 |
| கிடைத்த இடம் | : | தாளவாடி, சத்தியமங்கலம் வட்டம், பெரியார் மாவட்டம். |
| காலம் | : | கி.பி. 8-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 84 செ.மீ. |
| | | அகலம் : 81 செ.மீ. |
| | | கனம் : 11 செ.மீ. |

வலது கையில் வாளுடனும், இடது கையில் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு குடையின்கீழ் ஒரு வீரன் குதிரையின் மேலிருந்து சண்டையிடும் காட்சி. ஒருவன் குதிரைக்கு முன்னால் கேடயத்தையும் வாளையும் பிடித்திருக்கும் காட்சி. ஒரு வீரன் அம்பெய்யும் காட்சி. குதிரைக்குப் பின்னால் ஒருவன் இடக்கையில் தீப்பந்தம் தாங்கியிருப்பது போலவும், ஒருவன் கையில் ஆயுதம் பிடித்திருப்பது போலவும் அமைக்கப்பட்டுள்ளது. இது ஒரு கருங்கல் சிற்பம்.

**சிவன்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 183/87 |
| கிடைத்த இடம் | : | பெரும்பள்ளம் ஓடை, ஈரோடு |
| காலம் | : | கி.பி. 13-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 25 செ.மீ. |
| | | அகலம் : 13 செ.மீ. |
| | | கனம் : 14 செ.மீ. |

உடைந்த சிவன் கற்சிற்பத்தின் தலைப்பகுதி. தலையின் முடி கட்டப்பட்டு அலங்கரிக்கப்பட்டுள்ளது. தலையின் இடது மேல் உச்சிப் பகுதியில் பிறைச்சந்திரன் உள்ளது. இரண்டு கண்களுக்கு இடையில் நெற்றியில் கண் ஒன்று உள்ளது. இது ஒரு கருங்கல் சிற்பமாகும்.

**சண்டிகேசுவரர்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 140/87 |
| கிடைத்த இடம் | : | பிரமியம், தாராபுரம் வட்டம்,<br>பெரியார் மாவட்டம். |
| காலம் | : | கி.பி. 9-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 82 செ.மீ.<br>அகலம் : 42 செ.மீ.<br>கனம் : 13 செ.மீ. |

இடது காலை மடக்கியும் வலது கால் பூமியில் ஊன்றியும் அமர்ந்த நிலை. முப்புரி இடத்தோள்பட்டையிலிருந்து மார்புப் பகுதி வழியாக அமைந்துள்ளது. கழுத்தில் அணிகலன்கள், காதில் தோடு, அரையில் ஆடை, கையில் கோடாரி அமைந்துள்ளன.

**கஜலட்சுமி**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 342/87 |
| கிடைத்த இடம் | : | புதுக்கரைப் புதூர்<br>கோபி வட்டம், பெரியார் மாவட்டம். |
| காலம் | : | கி.பி. 17-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 35 செ.மீ.<br>அகலம் : 112 செ.மீ.<br>கனம் : 25 செ.மீ. |

மத்தியில் அமர்ந்த நிலையில் லட்சுமி வலக்கையிலும் இடக்கையிலும், தாமரையைத் தொடுவது போன்று இருக்க இரு பெண்கள் இரு பக்கமும் வெஞ்சாமரம் வீசுகிறார்கள்.

## மூத்த தேவி (ஜேஷ்டா)

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 86/87 |
| கிடைத்த இடம் | : | ஊஞ்சலூர், ஈரோடு வட்டம், பெரியார் மாவட்டம். |
| காலம் | : | கி.பி. 10-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 76 செ.மீ. |
| | | அகலம் : 43 செ.மீ. |
| | | கனம் : 15 செ.மீ. |

தலையில் கிரீடத்துடனும் காதுகளில் தோடுகளுடனும் கழுத்தில் மணிகளுடனும் வலக்கை அபயம் கொடுப்பதுபோலும், இடக்கை தொடையின் மேல் வைத்திருப்பது போலவும் காலில் சிலம்பு அணிந்து, இடையில் கச்சைகட்டி கால்கள் இரண்டும் தரையில் பட அமர்ந்த காட்சி. இடையில் அணிந்திருக்கும் ஆடை மெல்லியதாகவும், கரையுடன் இயற்கையாக ஒதுக்கி இருப்பதை இரு கால்களுக்கிடையே காணலாம்.

## பைரவர்

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 289/87 |
| கிடைத்த இடம் | : | தாராபுரம், தாராபுரம் வட்டம், பெரியார் மாவட்டம் |
| காலம் | : | சுமார் கி.பி. 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 91 செ.மீ. |
| | | அகலம் : 45 செ.மீ. |
| | | கனம் : 19 செ.மீ. |

பைரவருக்குப் பின் ஒரு நாய் நிற்கிறது. வலது மேல் கையில் உடுக்கையும், இடது மேல் கையில் பாம்பும், இடது கீழ்க்கையில் கிண்ணமும் இருப்பதுபோல் அமைக்கப்பட்டுள்ளது. வலது கீழ்க்கை உடைந்துள்ளது. ஒரு தலைநாகம் இடுப்பில் சுற்றியுள்ளது. இரண்டு அணிகலன்கள் கழுத்தில் அணியப் பட்டுள்ளன. முழங்காலுக்குச் சற்றுமேல் முண்டமாலை அணிந்துள்ளது. கால்களில் தண்டையுடனும், ஜுவால கேசத்துடனும் நிர்வாணக் கோலமாக அமைந்துள்ளது.

## மரச்சிற்பங்கள்

*மரச்சிற்பங்கள் பொதுவாக இலுப்பை மரக்கட்டைகளில் செய்வார்கள். இலுப்பை எண்ணெய், மரக்கட்டைகளை பூச்சிகளால் அழிவுறாமல் காக்கின்றது. தமிழ்நாடு, கோயில் தேர்களுக்குச் சிறப்பான மாநிலம். பெரியார் மாவட்டத்தில் மடவிளாகம், திங்களூர், தேவர்மலை போன்ற இடங்களில் கோயில்களை ஒட்டித் தேர்கள் உள்ளன. தேர்களில் உள்ள சிற்பங்கள் சிறந்த வேலைப்பாடுடையவை. மரச்சிற்பங்கள் சிற்பக் கூடத்தை அலங்கரிக்கின்றன.*

### யாளியும், யானையும்

| | | |
|---|---|---|
| *பதிவு எண்* | : | *406/87* |
| *கிடைத்த இடம்* | : | *கோயம்பேடு, செங்கல்பட்டு மாவட்டம்* |
| *காலம்* | : | *கி.பி. 18-ம் நூற்றாண்டு* |
| *அளவு* | : | *உயரம் : 56 செ.மீ.* |
| | | *அகலம் : 18 செ.மீ.* |
| | | *கனம் : 4 செ.மீ.* |

*யானை தும்பிக்கையினை உயர்த்தி மேல்நோக்கிப் பார்க்கிறது போலவும், அதற்குமேல் யாளி நிற்பது போலவும் அமைக்கப்பட்டுள்ளது.*

### வேணுகோபாலன்

| | | |
|---|---|---|
| *பதிவு எண்* | : | *405/87* |
| *கிடைத்த இடம்* | : | *கோயம்பேடு, செங்கல்பட்டு மாவட்டம்* |
| *காலம்* | : | *கி.பி. 18-ம் நூற்றாண்டு* |
| *அளவு* | : | *உயரம் : 37 செ.மீ.* |
| | | *அகலம் : 18 செ.மீ.* |
| | | *கனம் : 9 செ.மீ.* |

*தலையில் கிரீடத்துடன் இரண்டு கைகளால் புல்லாங்குழல் பிடித்து ஊதுவது போலவும், மேல் வலது கையிலும், மேல் இடது கையிலும் பிடித்திருக்கிறது போலவும், முழங்காலுக்குக் கீழ் தொங்கும் மாலையுடனும், கணுக்கால் வரை ஆடையுடனும் அமைக்கப்பட்டுள்ளது.*

### மதுரைவீரன்

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 417/87 |
| கிடைத்த இடம் | : | சோழபுரம், இராமநாதபுரம் மாவட்டம் |
| காலம் | : | கி.பி. 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 34 செ.மீ. |
| | | அகலம் : 24 செ.மீ. |
| | | கனம் : 5.5 செ.மீ. |

வலது கை ஓங்கியபடி வாள் பிடித்துள்ளது போலவும், இடது கையில் (தண்டாயுதத்தை) கதாயுதத்தைத் தரையில் ஊன்றியும், தலைப்பகுதியில் மாலையுடனும், கழுத்தில் பதக்கத்துடன் கூடிய அணிகலன், கழுத்திலிருந்து முழங்கால்வரை மாலையும், காலில் தண்டமும் பாதங்களுக்கு காலணிகளும் அணியப்பட்டுள்ளன.

### நம்மாழ்வார்

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 422/87 |
| கிடைத்த இடம் | : | காட்டுமன்னார்குடி, தென் ஆர்க்காடு மாவட்டம் |
| காலம் | : | கி.பி. 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 27 செ.மீ. |
| | | அகலம் : 13.5 செ.மீ. |
| | | கனம் : 5.5 செ.மீ. |

உட்கார்ந்த நிலை. வலது கை படிப்பித்து கொடுப்பது போலவும், இடது கை சுவடிக்கட்டுடன் மடியில் வைத்திருப்பது போலவும், கழுத்தில் அணிகலனுடனும், முப்புரி நூலுடனும் அமைக்கப்பட்டுள்ளது.

### மாணிக்கவாசகர்

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 417/87 |
| கிடைத்த இடம் | : | தஞ்சாவூர், தஞ்சாவூர் மாவட்டம் |
| காலம் | : | கி.பி. 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 23 செ.மீ. |
| | | அகலம் : 10 செ.மீ. |
| | | கனம் : 5 செ.மீ. |

அரையில் கட்டிய உடையுடனும், கழுத்தில் சிறு மாலையுடனும், வலது கையில் மாலையுடனும், இடது கையை இடுப்பில் வைத்திருப்பதுபோலவும் அமைந்துள்ளது.

**கருடன் மீது விஷ்ணு**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 421/87 |
| கிடைத்த இடம் | : | திருப்பதி, ஆந்திரமாநிலம் |
| காலம் | : | கி.பி. 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 33 செ.மீ. |
| | | அகலம் : 19 செ.மீ. |
| | | கனம் : 6.5 செ.மீ. |

கருடன் தோளின் மீது விஷ்ணு அமர்ந்த கோலத்தில் வலது மேல் கையில் சக்கரமும், இடது மேல் கையில் விலங்குடனும், இடது கீழ்க்கையில் அபய முத்திரையுடனும், வலது கீழ்க்கை ஆசீர்வதிக்கும் வண்ணமும் உள்ளது. விஷ்ணு மாலையுடனும், கழுத்தில் அணிகலனுடனும் அமைந்துள்ளது. கருடனுக்கு நான்கு செட்டைகள் காணப்படுகின்றன. கருடனுக்கு நெற்றியில் நாமம் போடப்பட்டுள்ளது. காலில் தண்டை உள்ளது.

**சிவன்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 404/87 |
| கிடைத்த இடம் | : | கோயம்பேடு, செங்கல்பட்டு மாவட்டம் |
| காலம் | : | கி.பி. 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 39 செ.மீ. |
| | | அகலம் : 18 செ.மீ. |
| | | கனம் : 8 செ.மீ. |

நான்கு தலைகள் தெரியும் வண்ணம் தலையில் கிரீடங்களுடனும் 12 கைகளுடனும் ஒரு காலை மடக்கியும், ஒரு காலைத் தாமரைப் பூவின் இதழ்களில் வைத்திருப்பது போலவும், உட்கார்ந்த நிலை. வலது மேல் கையில் சங்கும் மற்ற கைகளில் பூக்களும், இடது மேல் கையில் உடுக்கையும், மற்ற இரண்டு கரங்களில் பூக்களும் அதன் கீழ்கையில் ஒரு மணியும் உள்ளது. வலது கீழ்க்கை அபய முத்திரையுடனும் இடது கீழ்க்கை உடைந்தும் காணப்படுகிறது. மாலை கால்களின் மேல் படர்ந்துள்ளது.

**பைரவர்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 411/87 |
| கிடைத்த இடம் | : | சோழபுரம், இராமநாதபுரம் மாவட்டம் |
| காலம் | : | கி.பி. 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 36 செ.மீ. |
| | | அகலம் : 21 செ.மீ. |
| | | கனம் : 5.5 செ.மீ. |

கையில் பாம்பைப் பிடித்துப் படுத்திருக்கும் ஒருவன் மீது இடது காலை ஊன்றி வலது காலை மேலே தலைப்பக்கம் தூக்கி பத்துக் கைகளுடனும், தலையில் கிரீடத்துடனும், மாலை அணிந்திருக்கும் காட்சி. வலது மேல் கையில் உடுக்கை, ஒரு கையில் கத்தி, ஒரு கையில் அபய முத்திரை, இடது மேல் கையில் கோலின் மேல் நந்தியுடன், மான் ஒரு கையில், ஒரு கையில்கிண்ணத்துடன், ஒரு கையைத் தொங்கவிட்டும், ஒரு கையை வலதுகால் பக்கம் தொங்கவிட்டும் தலைப்பக்கம் இடது வலது பக்கங்களில் இரு பெண்கள் மலர்கள் சொரிவது போலும், வலது பக்கம் ஒரு பெண் நின்று மலர் சொரிவது போலும், இடது பக்கம் தரையில் முனிவர் ஒருவர் வணங்குவது போலும் அமைந்துள்ளது.

**கணம்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 408/87 |
| கிடைத்த இடம் | : | சோழபுரம், இராமநாதபுரம் மாவட்டம் |
| காலம் | : | சுமார் கி.பி. 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 23 செ.மீ. |
| | | அகலம் : 18 செ.மீ. |
| | | கனம் : 5.5 செ.மீ. |

இடது கையில் சங்கை வைத்துக் கொண்டும், வலது கையை உயர்த்தித் தோளில் பாம்புடனும், காதில் கடுக்கனுடனும், இடது காலைத் தரையில் ஊன்றிக் கொண்டு, வலது கால் முழங்காலால் தரையில் ஊன்றிக்கொண்டு இடுப்பில் ஆடை அணிந்து கால்களிலும், கைகளிலும் தண்டை அணிந்துள்ள நிலை. (முழங்கைக்கு மேலும் தண்டை அணிந்துள்ளது).

**கணம்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 401/87 |
| கிடைத்த இடம் | : | சோழபுரம், இராமநாதபுரம் மாவட்டம் |
| காலம் | : | சுமார் கி.பி. 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 23 செ.மீ. |
| | | அகலம் : 18 செ.மீ. |
| | | கனம் : 5.5 செ.மீ. |

யாளி முகத்துடன் மார்பில் பதக்கத்துடனும் வலது கையில் கத்தியுடனும் ஒரு சுருண்ட பாம்புடனும் இடது கையில் பாம்பும், அபய முத்திரையுடனும் இடுப்பில் ஆடை அணிந்து கால்களை மடக்கி உட்கார்ந்தும், கால்களில் அணிகலன் அணிந்தும் காணப்படுகிறது.

**கணம்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 412/87 |
| கிடைத்த இடம் | : | சோழபுரம், இராமநாதபுரம் மாவட்டம் |
| காலம் | : | சுமார் கி.பி. 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 24 செ.மீ. |
| | | அகலம் : 19 செ.மீ. |
| | | கனம் : 6 செ.மீ. |

குழல் ஊதும் காட்சி. பின்னால் வலது பக்கத்தில் பாம்பு நிற்பது போலும் கால்களை மடக்கி தரையில் உட்கார்ந்தும், கையில் காப்பும், கால்களில் தண்டையும் அணிந்து காணப்படுகிறது.

**சுப்பிரமணியர்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 419/87 |
| கிடைத்த இடம் | : | தஞ்சாவூர், தஞ்சாவூர் மாவட்டம் |
| காலம் | : | சுமார் கி.பி. 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 42.5 செ.மீ. |
| | | அகலம் : 24 செ.மீ. |
| | | கனம் : 5.5 செ.மீ. |

மயில்மேல் இடது காலை ஊன்றியும் வலது காலைத் தரையில் ஊன்றியும் வலது மேல் கையில் வேலும் கழுத்தில் அணிகலன்களுடனும் இடுப்பில்

ஆடையுடனும், முழங்கால்வரை மாலை அணிந்தும் கால்களில் அணிகலன் களுடனும், தலையில் கிரீடத்துடனும் காணப்படுகிறது.

**இராமன் தங்கமானைக் கொல்லுதல்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 420/87 |
| கிடைத்த இடம் | : | திருக்கண்ணன்குடி, தஞ்சாவூர் மாவட்டம் |
| காலம் | : | சுமார் கி.பி. 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 48 செ.மீ. |
| | | அகலம் : 28 செ.மீ. |
| | | கனம் : 8.5 செ.மீ. |

மரத்தின் கீழ் வில்லை வளைத்து மானைக் கொல்லும் காட்சி. அரையில் ஆடை, கழுத்தில் அணிகலன் தலைமுடி உயர்த்தி உச்சியில் கட்டப்பட்டுள்ளது. தோள்பட்டைக்குக் கீழ் ஒட்டியாணம், மணிக்கட்டில் வளையல், காலில் தண்டை மான் பின்கால்களால் நிற்கும் காட்சி.

**மரத்தின் மீது நங்கை**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 423/87 |
| கிடைத்த இடம் | : | தெரியவில்லை |
| காலம் | : | சுமார் கி.பி. 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 24 செ.மீ. |
| | | அகலம் : 19 செ.மீ. |
| | | கனம் : 5 செ.மீ. |

மகரத்தின் மீது ஒரு பெண் இடது காலை வைத்துக் கொண்டும் வலது காலைத் தரையில் வைத்து இடது கையை உயர்த்தியும், வலது கையில் பூ வைத்தும் வலது பக்கத்தில் கழி இருப்பது போலவும் உடையணிந்து கழுத்தில் மாலையுடனும் காணப்படுகிறது.

**வீணாதரர்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 409/87 |
| கிடைத்த இடம் | : | சோழபுரம், இராமநாதபுரம் மாவட்டம் |
| காலம் | : | சுமார்கி.பி. 18ம் நூற்றாண்டு |

| | | |
|---|---|---|
| அளவு | : | உயரம் : 23 செ.மீ. |
| | | அகலம் : 19 செ.மீ |
| | | கனம் : 5 செ.மீ. |

யாளி முகத்திற்குக் கீழ் நான்கு கைகளுடன் இருகைகளால் வீணையை இசைத்தும், வலது மேல் கையில் உடுக்கையும் இடது கீழ்க்கையில் பூவுடனும் ஆடை அணிந்து இரு பக்கங்களிலும் வணங்கும் முனிவர்களோடு நிற்கும் காட்சி.

**ஸ்கந்தருடன் உமா**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 418/87 |
| கிடைத்த இடம் | : | தஞ்சாவூர் |
| காலம் | : | சுமார் கி.பி. 18ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 20.5 செ.மீ. |
| | | அகலம் : 36 செ.மீ |
| | | கனம் : 6 செ.மீ. |

இரு கால்களையும் மடக்கி உட்கார்ந்த நிலையில் நான்கு கைகளுடன் மடியில் கந்தருடன் உமா. வலது மேல் கையில் கள்ளிப்பழம், ஒரு கை ஆசீர்வதிக்குமாப் போல் இடது கையால் கந்தரை அணைத்து ஒரு கையில் பூவைத்திருக்கும் காட்சி. இரண்டு பக்கங்களிலும் யாளிகள் வாளை மேல் நோக்கி பிடித்திருக்கும் காட்சி.

**யாளியும், யானையும்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 407/87 |
| கிடைத்த இடம் | : | கோயம்பேடு, செங்கல்பட்டு மாவட்டம் |
| காலம் | : | சுமார் கி.பி. 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 54 செ.மீ. |
| | | அகலம் : 17 செ.மீ. |
| | | கனம் : 4 செ.மீ. |

யானையின் மேல் யாழி நின்று தும்பிக்கையால் சண்டையிடும் காட்சி.



இராமன் தங்கமானைக் கொல்லுதல் (*மரச்சிற்பம்*)
சுமார் கி. பி. 18-ஆம் நூற்றாண்டு
திருக்கண்ணன்குடி, தஞ்சாவூர் மாவட்டம்



தேவியருடன் விஷ்ணு (*படிமம்*)
கி. பி. 19--ஆம் நூற்றாண்டு
வைரமங்கலம், பவானி வட்டம்

# படிமங்கள்

*மொஹஞ்சொதாரோ, ஹரப்பா அகழ்வாய்வில் கிடைத்த நடனப் பெண் வெங்கலப் படிமம் கி.மு. இரண்டாயிரத்திலிருந்து உலோகக் கலை இந்தியாவில் சிறப்புற்றிருந்ததைத் தெரிவிக்கிறது. கி.மு.3ம் நூற்றாண்டளவில் சமயம் சார்ந்த பௌத்த படிமங்கள் ஆந்திர அமராவதிப் பகுதிகளிலிருந்து கிடைத்துள்ளன. ஏறக்குறைய இதே காலத்தில் தமிழகத்தில் பெருங்கற்கால புதைகுழிகளிலிருந்து பல உலோகப் படிமங்கள் கிடைத்துள்ளன. ஆதிச்சநல்லூரில் கிடைத்த அன்னை உருவம் நீலகிரி பகுதிகளில் கிடைத்த விலங்குகள் உருவங்கள் கொடுமணலில் கிடைத்த புலி உருவம் குறிப்பிடத்தக்கவை.*

*சமயம் சார்ந்த நூல்களில் ஆகம விதிப்படி படிமங்கள் பஞ்சலோகத்தால் செய்யப்பட வேண்டுமென்றிருந்தாலும் படிமங்களை உருவாக்குபவரின் வசதிக்கேற்ப அவரின் விருப்பத்திற்கேற்ப படிமங்கள் உருவாக்கப்பட்டன. செம்பு, வெள்ளீயம், ஈயம், துத்தநாகம் போன்ற உலோகக் கலவையால் பொதுவாக உருவாக்கப்பட்டிருக்கின்றன. பல்லவர் காலத்தில் சிறிய அளவிலான சிறந்த படிமங்கள் உருவாக்கப்பட்டன. சோழர் காலத்தில் இக்கலை உச்ச நிலை அடைந்தது. படிமங்கள் மெழுகு இழத்தல் முறையில் செய்யப்பட்டன. மெழுகு இழத்தல் முறையிலும் இரண்டு வகைகள் உண்டு. ஒன்று அடர் வார்ப்பு முறை* (Solid casting) *மற்றது வெற்றுக் கூடு வார்ப்பு முறை* (Hollow casting).

*பெரியார் மாவட்டத்தில் ஜம்பை, தாராபுரம் போன்ற இடங்களில் படிமங்கள் கிடைத்துள்ளன.*

**காளி (துர்க்கை)**

| | | |
|---|---|---|
| *பதிவு எண்* | : | *436/87* |
| *கிடைத்த இடம்* | : | *பாதூர், தஞ்சாவூர் மாவட்டம்* |
| *காலம்* | : | *கி.பி. 17ம் நூற்றாண்டு* |
| *அளவு* | : | *உயரம் : 71 செ.மீ.* |
| | | *அகலம் : 29 செ.மீ.* |
| | | *கனம் : 13 செ.மீ.* |

**ஸ்ரீதேவி**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 436/87 |
| கிடைத்த இடம் | : | கிளையூர், தஞ்சாவூர் மாவட்டம் |
| காலம் | : | கி.பி. 13-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 60 செ.மீ. |
| | | அகலம் : 24 செ.மீ. |
| | | கனம் : 12 செ.மீ. |

கிரீடத்துடன் வலது கையைத் தொங்க விட்டு, இடது கையில் முத்திரையுடன், காதில் குண்டலங்களுடன் கழுத்தில் மாலை அணிந்தும், கையில் ஒட்டியானம் அணிந்தும் வளையல் அணிந்தும் நிற்கும் காட்சி.

**விஷ்ணு**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 435/87 |
| கிடைத்த இடம் | : | கல்பட்டு, தென் ஆர்க்காடு மாவட்டம். |
| காலம் | : | கி.பி. 13-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 81 செ.மீ. |
| | | அகலம் : 30 செ.மீ. |
| | | கனம் : 26 செ.மீ. |

வலது பின் கையில் சக்கரமும். இடது பின் கையில் சங்கும், வலது முன் கை அபய முத்திரையுடனும், முன் இடக்கையைத் தொங்கவிட்டும் உள்ளது. கழுத்தில் அணிகலன்கள் உள்ளன.

**பூதேவி**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 437/87 |
| கிடைத்த இடம் | : | கிளையூர், தஞ்சாவூர் |
| காலம் | : | கி.பி. 13-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 60 செ.மீ. |
| | | அகலம் : 24 செ.மீ. |
| | | கனம் : 12 செ.மீ. |

மகரத்தின் மீது ஒரு பெண் இடது காலை வைத்து, வலது காலைத் தரையில் வைத்து, இடது கையை உயர்த்தியும், வலது கையில் பூவுடனும், வலது பக்கத்தில் சுருள் இருப்பது போலவும் உடையணிந்து கழுத்தில் மாலையுடன் காணப் படுகிறது.

### நடராஜர்

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 432/87 |
| கிடைத்த இடம் | : | நெடுவிக்கோட்டை, தஞ்சாவூர் மாவட்டம் |
| காலம் | : | கி.பி. 13-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 65.5 செ.மீ. |
| | | அகலம் : 54.5 செ.மீ. |
| | | கனம் : 19.5 செ.மீ. |

தீப்பிழம்புடன் கூடிய பிரபைக்குள் நடராஜர் நடனமாடும் காட்சி. வலது காலால் அரக்கன் மேல் நின்று கொண்டு, வலது பின்கையில் உடுக்கையுடனும், முன்கை அபய முத்திரையுடனும், இடது பின்கையில் தீயுடனும், முன் கை கீழ் நோக்கியும், சடை இரு பக்கமும் பறந்து பிரபையை ஒட்டியிருக்கும் காட்சி.

### ஈஸ்வரர்

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 120/89 |
| கிடைத்த இடம் | : | ஜம்பை, பவானி வட்டம், பெரியார் மாவட்டம் |
| காலம் | : | கி.பி. 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 23 செ.மீ. |
| | | அகலம் : 15 செ.மீ. |
| | | கனம் : 10 செ.மீ. |

நான்கு கைகள் இருக்கின்றன. வலது பக்கத்தில் உள்ள வலது கை ஒன்றில் அபய முத்திரை காட்டுகிறது. மற்றொன்றில் மழு இருக்கிறது. வலது கைகளில் ஒன்று வரத முத்திரை காட்டுகிறது. மற்றகையில் மான் இருக்கிறது. இடது கால் மடக்கி உட்கார்ந்து, வலது காலைத் தொங்க விட்ட நிலை. உட்கார்ந்துள்ள பீடம் சேதமடைந்து உள்ளது.

### ரிசபரூடர்

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 121/89 |
| கிடைத்த இடம் | : | ஜம்பை, பவானி வட்டம் பெரியார் மாவட்டம் |
| காலம் | : | கி.பி. 18-ம் நூற்றாண்டு |

அளவு : உயரம் : 35 செ.மீ.
அகலம் : 19 செ.மீ.
கனம் : 12 செ.மீ.

நின்ற நிலை. நான்கு கைகள் உள்ளன. இடது கைகள் இரண்டும் சேதமடைந்துள்ளன. வலது கை ஒன்று அபயமுத்திரை காட்டுகிறது. மற்றொன்றில் மழு உள்ளது. இடது முன் கை முழங்கையில் உடைந்துள்ளது. உடைந்த பகுதி காணவில்லை.

**பாலகிருஷ்ணர்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 434/87 |
| கிடைத்த இடம் | : | சில்லத்தூர், தஞ்சாவூர் மாவட்டம் |
| காலம் | : | கி.பி. 13-ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 42 செ.மீ. |
| | | அகலம் : 23 செ.மீ. |
| | | கனம் : 13.5 செ.மீ. |

நடனமாடும் நிலையில் இடது காலைத் தூக்கி வலது காலில் நிற்கும் காட்சி. நிர்வாண கோலத்துடனும், கழுத்தில் மாலையுடனும், கைகளில் ஒட்டியானத் துடனும், காதில் குண்டலத்துடனும், இடது கையை பக்கவாட்டில் தரைக்கு இணையாக வைத்து, வலது கையில் ஆள்காட்டி விரல் நீட்டப்பட்டு, மற்ற விரல்கள் மடங்கி இருக்க, தலையில் கிரீடமும், இடுப்பில் அணிகலன்களும், அணிவிக்கப்பட்டு மணிகள் தொங்குகின்றன.

**ஆலிங்கன சந்திரசேகர்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 130/90 |
| இடம் | : | முத்தூர் சோழீஸ்வரமுடையார் கோவில் முத்தூர், பெரியார் மாவட்டம் |
| காலம் | : | கி.பி. 12-13 ஆம் நூற்றாண்டு |
| அளவு | : | 35 செ.மீ. உயரம் |

இப்படிமம் முத்தூர் சோழீஸ்வரமுடையார் கோவிலில் புதுப்பிக்கும் பணி நடைபெற்றபொழுது, கண்டெடுக்கப்பட்டது. 35 செ.மீ. உயரமுள்ள சந்திரசேகரின் நான்கு கைகளில் மேலே உள்ள இரண்டு கைகளில் மானும் மழுவும் ஏந்திய வண்ணமும், கீழே உள்ள இரண்டு கைகளில் வலது கை அபய

முத்திரையுடனும், இடது கை தேவியை அணைத்து இருப்பது போன்றும் வடிவமைக்கப்பட்டுள்ளது.

25 செ.மீ. உயரமுள்ள தேவியின் வலது கை மலர் ஏந்தியும், இடது கை தொங்கிய நிலையிலும் வடிக்கப்பட்டுள்ளது. இரண்டு படிமங்களிலும் ஆடை, ஆபரணங்கள் மற்றும் கிரீடம் மிகவும் நேர்த்தியாகவும், அழகாகவும் வடிவமைக்கப்பட்டுள்ளது.

**விஷ்ணு தேவியருடன்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 121/96 – 129/96 |
| இடம் | : | வைரவப் பெருமாள் கோயில்<br>வைரமங்கலம், பவானி வட்டம் |
| காலம் | : | கி.பி. 19ம் நூற்றாண்டு |
| அளவு | : | உயரம் : 16 செ.மீ.<br>அகலம் : 6 செ.மீ. |

பவானி வட்டத்தில் வைரவப் பெருமாள் கோவிலில் கண்டெடுக்கப் பட்டுள்ள இச்சிலைகள் அளவில் சிறியதாக இருந்தாலும் நன்கு வடிவமைக்கப் பட்டுள்ளன.

இதில் விஷ்ணு தேவியருடன் நாகசப்ரத்துடன் கூடிய பீடத்தில் நிறுத்தப்பட்டுள்ளது. நாக சப்ரத்தின் இரண்டு பக்கங்களிலும் விஷ்ணுவின் சின்னங்களான சங்கும், சக்கரமும் உள்ளன.

மேலும் ஒரு விஷ்ணு சிலை தேவியருடன் தனியாக உள்ளது. இச்சிலைகள் நாகசப்ரத்துடன் இல்லாமல் தனித்தனி பீடத்தில் மேல் வடிவமைக்கப் பட்டுள்ளது. மேற்கண்ட இடத்தில் கிடைத்த இரண்டு விஷ்ணு சிலைகளும், 4 தேவியர் சிலைகளும் காட்சிப் பகுதியில் வைக்கப்பட்டுள்ளன.

மேற்கண்ட சிலைகளைத் தவிர விஷ்ணு கோவில்களில் பக்தர்களுக்கு தலையில் வைத்து ஆசீர்வதிக்கப் பயன்படுத்தப்படும் சடாரியும் காட்சியில் வைக்கப்பட்டுள்ளது. சடாரியின் மேல் பாகத்தில் இரண்டு பாதங்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

**வட்ட வடிவ அலங்கார இரும்பு மேஜை**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 317/87 |
| இடம் | : | மாவட்ட மைய நூலகம், ஈரோடு |
| காலம் | : | கி.பி. 18ம் நூற்றாண்டு |

வட்ட வடிவமாக அமைந்துள்ள இந்த மேஜை இரும்புக் கம்பிகளால் வார்க்கப்பட்டது. இந்த மேஜையில் 12 இராசிகளுக்குரிய உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. மிகுந்த சிற்ப வேலைப்பாடுகளுடன் கூடிய இம்மேஜை பார்ப்பதற்கு மிகவும் அழகாக உள்ளது.

**கைப் பீரங்கி**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 196/91 |
| இடம் | : | கோபிச் செட்டிப்பாளையம் |
| காலம் | : | 18ம் நூற்றாண்டு |
| அளவு | : | நீளம் : 35 செ.மீ. |
| | | அகலம் : 9 செ.மீ. |
| | | எடை : 2.5 கி. கிராம் |

கோபிச் செட்டிப் பாளையத்தில் வீடுகட்டுவதற்கு அடித்தளம் தோண்டிய போது கிடைத்த இப்பீரங்கி வெண்கலத்தால் ஆனது. இதுபோன்ற சிறிய அளவில் பீரங்கி கிடைத்திருப்பது இதுவே முதல் முறையாகும்.

# ஓவியங்கள்

மனித இனம் தோன்று தொட்டே ஓவியக்கலையில் ஈடுபாடு கொண்டு இருக்கிறது. வரலாற்றுக் காலத்திற்கு முன்னால் மக்களைப் பற்றிய செய்திகள் அதிகம் கிடைக்கப் பெறவில்லை. ஆனால் அம்மக்களது வாழ்விடங்களில் அவர்கள் பயன்படுத்திய பல பொருட்களை விட்டு சென்றுள்ளனர். அவை கற்கருவிகள், ஆயுதங்கள், பாறை ஓவியங்கள் போன்றவையாகும். ஆதி மனிதன் இயற்கையாகக் கிடைத்த கரி, மண், சுண்ணாம்புக்கல், சாயங்கள் போன்றவற்றைக் கொண்டு தானிருந்த குகையின் சுவர்களில் தான் வெளியே வர பயந்த நேரத்தில் தன் நேரத்தை ஓவியம் தீட்டுவதில் செலவிட்டான்.

காலப்போக்கில் இது ஒரு கலையாக உருவெடுத்தது. பாறையிலும், சுவரிலும், மரத்திலும், கண்ணாடியிலும், ஓலையிலும், காகிதத்திலும், துணியிலும் மற்றும் பொருட்களின் மீதும் ஓவியங்கள் தீட்டப்பட்டன. தமிழ் நாட்டில் நூற்றுக்கணக்கான இடங்களில் பாறை ஓவியங்கள் சமீபத்தில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

தமிழ் நாட்டில் சித்தன்னவாசல், ஸ்ரீரங்கம், காஞ்சீபுரம், விஜயமங்கலம், தஞ்சாவூர், பிரகதீஸ்வரர் ஆலயம் போன்ற இடங்களில் பாறைகள் மற்றும் சுவர்களில் தீட்டப்பட்ட ஓவியங்கள் இன்றும் காட்சியளிக்கின்றன. பல்லவர்கள், சோழ மன்னர்கள், விஜயநகர் மன்னர்கள், நாயக்க அரசர்கள் இக்கலையைப் பெரிதும் வளர்த்தனர்.

தஞ்சாவூர் ஓவியக்கலை ஆங்கிலேயரது கலையுடன் இணைந்து வளர்ந்தது. ஆங்கிலேயர் காலத்து ஓவியங்கள் பெரும்பாலும் துணிகளிலும், காகிதங்களிலும், தீட்டப்பட்டன. மொகலாயர் காலத்து ஓவியங்கள் சிறிய அளவில் ஓலைகளிலும், காகிதத்திலும், தந்தத்திலும், மைக்காவிலும் தீட்டப் பட்டன. 20-ம் நூற்றாண்டில் தற்காலத்திய ஓவியக்கலை வளர ஆரம்பித்தது.

**வீணை இசைப்பவர்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 472/87 |
| ஓவியர் | : | பி. விஜயலட்சுமி |
| இடம் | : | சென்னை |
| காலம் | : | தற்காலம் |
| அளவு | : | நீளம் : 34 செ.மீ. |
| | | அகலம் : 24.5 செ.மீ. |

இது நீர்வண்ண ஓவியம். இதில் பெண்ணுடைய தலையில் உள்ள முடிக்கற்றைகள் தனித்தனியாக வரையப்பட்டுள்ளன. மிகவும் கூர்மையாக நோக்கினால், பெண்ணுடைய தலையில் உள்ள முடிகளைத் தனித்தனியாக எண்ணி விடலாம். கேரளப்பாணியில் தலைமுடி வரையப்பட்டுள்ள இவ்வோவியம் சிறப்பானதொரு தற்கால ஓவியமாகும்.

**ஸ்ரீராமபட்டாபிஷேகம்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 431/87 |
| ஓவியர் | : | (தெரியவில்லை) சென்னை அருங்காட்சியகத்திலிருந்து பெறப்பட்டது. தஞ்சாவூர் ஓவியம் |
| காலம் | : | கி.பி. 19-ம் நூற்றாண்டு |
| அளவு | : | நீளம் : 60.5 செ.மீ.<br>அகலம் : 50.5 செ.மீ. |

இராமாயணத்தில் கூறப்பட்ட இராமபட்டாபிஷேகக் காட்சி மிக அழகாக தஞ்சாவூர் பலகை ஓவியமாக தீட்டப்பட்டுள்ளது. தங்க ரேக்குகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**கங்காபிஷேகம்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 430/87 |
| ஓவியர் | : | (தெரியவில்லை) சென்னை அருங்காட்சியகத்திலிருந்து பெறப்பட்டது. தஞ்சாவூர் ஓவியம் |
| காலம் | : | கி.பி. 19-ம் நூற்றாண்டு |
| அளவு | : | நீளம் : 61 செ.மீ.<br>அகலம் : 61 செ.மீ. |

இது ஓர் தஞ்சாவூர் பலகை ஓவியம். கங்காபிஷேகக் காட்சி நேர்த்தியாக சித்தரிக்கப்பட்டுள்ளது. தங்க ரேக்குகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**பூர்ணிமாவின் பார்வை**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 473/87 |
| ஓவியர் | : | என். இராகவன் |

காலம் : தற்காலம்
அளவு : நீளம் : 79 செ.மீ.
அகலம் : 53 செ.மீ.

இது நீர் வண்ணத்தால் தீட்டப்பட்டது. பூமாதேவியின் பார்வை நேர்த்தியாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது.

**கவலை**

பதிவு எண் : 471/87
ஓவியர் : எஸ். ரவிசங்கர்
காலம் : தற்காலம்
அளவு : நீளம் : 62 செ.மீ.
அகலம் : 38 செ.மீ.

இந்த ஓவியத்தைச் சற்று தொலைவில் நின்று நோக்கினால், அதில் ஒரு மனிதன் கவலையினால் தன் இரண்டு கண்களையும் கைகளினால் மூடிக்கொண்டு அமர்ந்திருப்பதைக் காணலாம்.

**பெண்**

பதிவு எண் : 477/87
ஓவியர் : ஏ.வி. இளங்கோ
காலம் : தற்காலம்
அளவு : நீளம் : 44.5 செ.மீ.
அகலம் : 33.5 செ.மீ.

இந்த ஓவியத்தில் ஒரு பெண் சிறப்பாகச் சித்தரிக்கப்பட்டுள்ளாள். இவ்வோவியம் துணியில் தீட்டப்பட்ட ஓர் எண்ணெய் வண்ண ஓவியமாகும்.

**ஓ ராமா ஓராமா**

பதிவு எண் : 474/87
ஓவியர் : வி. சந்திரசேகரன்
காலம் : தற்காலம்
அளவு : நீளம் : 77 செ.மீ.
அகலம் : 77 செ.மீ.

இவ்வோவியத்தில் இராமாயணத்தில் வரும் 'வாலியின் வதம்' என்ற நிகழ்ச்சி ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளது. இது துணியில் தீட்டப்பட்ட எண்ணெய் வண்ண ஓவியமாகும்.

**மண்டபம்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 478/87 |
| ஓவியர் | : | ஏ.வி. இளங்கோ |
| காலம் | : | தற்காலம் |
| அளவு | : | நீளம் 91 செ.மீ. |
| அகலம் | : | 32.5 செ.மீ. |

இந்த ஓவியம் பிற ஓவியங்களிலிருந்து மாறுபட்டது. துணி மீது எண்ணெய் வண்ணத்தின் உதவியுடன் (புரிசினால் தீட்டப்படாமல்) கத்தியினால் தீட்டப்பட்டுள்ளது. ஓவியர் அந்தியூர் வி. இளங்கோ. தான் சிறுவயதில் விளையாடிய பகுதியாகிய கோபிச் செட்டிப் பாளையத்தில் சந்தனத்துறையில் உள்ள பாழடைந்த மண்டபத்தைச் சித்தரித்துள்ளார்.

## ஓலைச் சுவடிகள்

பாறைகளில், கற்பலகைகளில், செப்பேடுகளில், தோல்களில், எழுத்துக்கள் வடிக்கப்பட்டன. கொங்கு நாட்டில் புலவர் பெருமக்கள் பலர் வாழ்ந்திருக்கின்றனர். மருத்துவம், உரை நடை, செய்யுள், புராணச் சம்பவங்கள், வரலாறுகள் ஓலைச் சுவடிகளில் எழுதினர். ஏராளமான ஓலைச் சுவடிகளை உ.வே. சாமிநாத ஐயர் சேகரித்து, செய்திகளைப் புத்தக வடிவில் வெளியிட்டார். இன்றும் ஏராளமான ஓலைச்சுவடிகள் கிடைக்கின்றன. கொங்கு நாட்டில் 150க்கு மேலான ஓலைச்சுவடிகள் சேகரிக்கப்பட்டு அவை ஈரோடு அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்படுகின்றன. அவை, வகைப்படுத்தப்பட்டு நூல்வடிவில் வெளியிடப்பட்டுள்ளது.

**இராமாயண வசனம்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 346/87 |
| கிடைத்த இடம் | : | கள்ளிப்பட்டி,<br>கோபி செட்டிபாளையம் வட்டம்,<br>பெரியார் மாவட்டம் |
| காலம் | : | 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | நீளம் : 42 செ.மீ.<br>அகலம் : 3 செ.மீ. |
| வரிகள் | : | 8 |
| ஏடுகள் | : | 315 |
| தன்மை | : | குறை |
| நிலை | : | சிதைவு |

**வெள்ளோடு சர்வேசுவரர் சதகம்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 49/86 |
| கிடைத்த இடம் | : | கோபி |
| காலம் | : | 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | நீளம் : 40 செ.மீ.<br>அகலம் : 2.5 செ.மீ. |
| வரிகள் | : | 6 |
| ஏடுகள் | : | 47 |
| தன்மை | : | குறை |
| நிலை | : | நல்ல நிலை |

### கொங்குநாட்டு வள்ளல்களைப் பற்றிய பாடல்கள்

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 49/86 |
| கிடைத்த இடம் | : | கோபிச் செட்டிப்பாளையம், பெரியார் மாவட்டம் |
| காலம் | : | 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | நீளம் : 36 செ.மீ.<br>அகலம் : 24 செ.மீ. |
| வரிகள் | : | 6 |
| ஏடுகள் | : | 77 |
| தன்மை | : | குறை |
| நிலை | : | சிதைவு |

### முகூர்த்த விதானம் சோதிடச் செய்திகள்

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 49/86 |
| கிடைத்த இடம் | : | கோபிச் செட்டிப்பாளையம், பெரியார் மாவட்டம் |
| காலம் | : | 18-ம் நூற்றாண்டு |
| அளவு | : | நீளம் : 38 செ.மீ.<br>அகலம் : 3.2 செ.மீ. |
| வரிகள் | : | 7 |
| ஏடுகள் | : | 23 |
| தன்மை | : | குன்றை |
| நிலை | : | சிதைவு |

### நவநீத விலாசம்

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 49/86 |
| கிடைத்த இடம் | : | கோபிச் செட்டிப்பாளையம் |
| காலம் | : | 18-ம் நூற்றாண்டு |
| ஆசிரியர் | : | இராமகிருஷ்ணதாசர் |
| அளவு | : | நீளம் : 28.5 செ.மீ.<br>அகலம் : 26 செ.மீ. |
| வரிகள் | : | 6 |
| ஏடுகள் | : | 45 |
| தன்மை | : | குறை |
| நிலை | : | நல்லநிலை |

## நாணயங்கள்

பண்டமாற்று முறைகளிலுள்ள குறைகளை நிவர்த்தி செய்யும் பொருட்டு நாணயங்கள் அச்சிடப்பட்டன. நாணயங்கள் அச்சிடத் தங்கம், வெள்ளி, செம்பு, ஈயம் போன்ற உலோகங்களும் எலக்ட்ரம், பிலான், வெங்கலம், பித்தளை போன்ற உலோகக் கலவைகளும் உபயோகிக்கப்பட்டன. பயன்படுத்தப்பட்ட உலோகத்திலிருந்து அந்நாட்டின் வளத்தைக் கணிக்கலாம். நாணயங்களிலிருந்து அக்கால மன்னர்கள், நாட்டின் பொருளாதாரம், மதம், புராணம், ஓவியம், மொழியின் வரிவடிவம் போன்றவற்றை அறிந்து கொள்ள முடியும்.

இவ்வருங்காட்சியகத்தில் பல்லவர், சேரர், சோழர், பாண்டியர், விஜயநகர், பாமினி, மைசூர், மொகலாயர், ஆங்கிலேய கிழக்கிந்திய கம்பெனி, ஆங்கிலேய இந்தியா, தற்காலத்திய பலநாட்டு நாணயங்கள் சேகரிக்கப்பட்டு பாதுகாக்கப் பட்டுள்ளன.

உலோக நாணய மாதிரிகள் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன

**புராணா அல்லது முத்திரை அடையாள நாணயங்கள்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.மு. 4-ம் நூற்றாண்டு |
| உலோகம் | : | பழங்கால நூல்களில் தங்கம், வெள்ளி, மற்றும் செம்பு உலோகங்களில் நாணயங்கள் இருந்தன என்று இருந்தாலும் வெள்ளி மற்றும் செம்பு நாணயங்களே கிடைத்துள்ளன. |

**இந்திய கிரேக்க நாணயங்கள்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.மு. 160-140 |
| உலோகம் | : | தங்கம், வெள்ளி |

இவை இந்திய கிரேக்கத் தொடர்பை வெளிப்படுத்துகின்றன.

**குஷானர், கனிஷ்கர் நாணயங்கள்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.மு. 1-ம் நூற்றாண்டு |
| உலோகம் | : | வெள்ளி, செம்பு |

**குஷானர், வாசுதேவர்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.பி. 2-ம் நூற்றாண்டு |
| உலோகம் | : | வெள்ளி, செம்பு |

**சாதவாகனர்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.பி. 155-164 |
| உலோகம் | : | சாதவாகன அரசர்கள் ஈயத்தையே நாணயம் அச்சடிக்க பயன்படுத்தினர். வெள்ளியும், செம்பும் சேர்ந்த உலோகக் கலவையும், செம்பு நாணயங்கள் செய்ய பயன்படுத்தினர். |

**குப்தர்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.பி. 320-326 |
| உலோகம் | : | குப்த மன்னர்கள் தங்க நாணயங்களை அதிகமாக வெளியிட்டனர். வெள்ளி, செம்பு நாணயங்களும் வெளியிடப்பட்டன. |

**சமுத்திர குப்தர்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.பி. 326-375 |
| உலோகம் | : | வெள்ளி, செம்பு |

**முதல் சந்திர குப்தர்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.பி. 375-431 |
| உலோகம் | : | வெள்ளி, செம்பு |

**மேற்கு சத்ரபர், உருத்திரசேனர்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.பி. 3-ம் நூற்றாண்டு |
| உலோகம் | : | வெள்ளி, செம்பு |

**வர்தனர், ஹர்ஷவர்தனர்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.பி. 606-648 |
| உலோகம் | : | வெள்ளி |

**இராசபுத்திரர் : பிரிதிவிராசர்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.பி. 175-193 |
| உலோகம் | : | செம்பினாலும், செம்பும், வெள்ளியும் கலந்து உலோகக் கலவையினாலும் நாணயங்கள் செய்யப்பட்டன. |

**மேலைச் சாளுக்கியர்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.பி. 973-1190 |
| உலோகம் | : | செம்பு |

**கீழைச் சாளுக்கியர்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.பி. 7-ம் நூற்றாண்டு |
| உலோகம் | : | செம்பு |

**சோழர்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.பி. 10-ம் நூற்றாண்டு |
| உலோகம் | : | செப்பு நாணயங்கள் பிரபலமானவை. வெள்ளியிலும், தங்கத்திலும் நாணயங்கள் வெளியிடப்பட்டன. |

சோழ அரசர்களில் இராஜஇராஜசோழர், இராஜேந்திர சோழர், இராஜேந்திர குலோத்துங்க சோழர் பிரபலமானவர்கள்.

**பாண்டியர்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.பி. 7-10-ம் நூற்றாண்டு |
| உலோகம் | : | பெரும்பாலானவை செப்பு நாணயங்கள், தங்கத்திலும், வெள்ளியிலும் நாணயங்கள் வெளியிடப்பட்டன. |

**சேரளர்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.பி. 14-ம் நூற்றாண்டு |
| உலோகம் | : | செம்பு |

**டெல்லி சுல்தான்கள்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.பி. 15-ம் நூற்றாண்டு |
| உலோகம் | : | தங்கம், வெள்ளி, செப்பு மற்றும் வெள்ளியும் செம்பும் சேர்ந்த உலோகக் கலவையிலும் நாணயங்கள் வெளியிடப் பட்டன. |

**விஜயநகர்**

| | | |
|---|---|---|
| காலம் | : | கி.பி. 15ம் நூற்றாண்டு |
| உலோகம் | : | செம்பு |

**மொகலாயர்**

காலம் : கி.பி. 16-ம் நூற்றாண்டு

உலோகம் : தங்கம், வெள்ளி, செம்பு

**மைசூர் சுல்தான்கள்**

காலம் : கி.பி. 17-ம் நூற்றாண்டு

உலோகம் : ஹைதர் அலி தங்கத்தால் பகோடா மற்றும் பணங்களை வெளியிட்டார். வெள்ளி, செப்பு நாணயங்களும் வெளியிடப்பட்டன.

**கிழக்கிந்திய கம்பெனி**

காலம் : கி.பி. 18-ம் நூற்றாண்டு

உலோகம் : செம்பு, வெள்ளி நாணயங்கள் இயந்திர மூலம் செய்யப்பட்டு, வெளியிடப்பட்டன. தமிழ், ஆங்கிலம், உருது ஆகிய மொழிகளில் வாசகங்கள் பொறிக்கப்பட்டன.

பெரியார் மாவட்டத்தில் தம்பட்டம் பாறை, தாராபுரம் போன்ற இடங்களில் நாணயங்கள் வெளியிடப்பட்டதற்கான தடையங்கள் உள்ளன. இன்றும் பவானி, தாளவாடி, கொடுமணல் போன்ற பகுதிகளில் தங்கம், வெள்ளி, செம்பு நாணயங்கள் கிடைத்த வண்ணம் இருக்கின்றன.

# வரலாற்றுக்கு முற்பட்ட காலம்

கொங்கு நாட்டில் புதைகுழிகள் (Cairns), புதை வட்டங்கள் (Stone Circles)/ பெருமளவில் காணப்படுகின்றன. பூமியின் மேற்பரப்பில் ஏராளமான வரலாற்றுச் சம்மந்தப்பட்ட பொருட்கள் பெறப்பட்டுள்ளன. கொடு மணலில் 1986ல் அகழ்வாய்வு நடைபெற்றது. கொடுமணல் பெரியார் மாவட்டத்தில் பெருந்துறை வட்டத்தில் சென்னிமலைக்கு தென்மேற்கில் சுமார் 15 கி.மீ. தொலைவில் உள்ள ஒரு கிராமமாகும். இங்கு கி.மு. 2-ம் நூற்றாண்டைச் சார்ந்த மட்பாண்டங்கள், அணிகலன்கள், மணிகள், இருப்பு ஆயுதங்கள், இரும்பு உருக்குத் தொழில் கருவிகள், கற்கருவிகள் மற்றும் நெசவுக் கருவிகள் முதலியன கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. சமீபத்தில் (1997) தமிழ்நாடு தொல்லியல் துறையால இப்பகுதியில் அகழாய்வு நடத்தப்படுகிறது.

கொடுமணலில் புதையுண்டு அகழ்வாய்வில் கண்டுபிடிக்கப்பட்ட கி.மு.300 முதல் கி.பி. 200 வரையிலான காலக்கட்டத்தில் உள்ள எலும்புக் கூடுகளின் புகைப் படங்கள், உருளை போன்றும், வட்டமாகவும், செதுக்கப்பட்ட வெங்கக் கற்கள், கார்னீலியன், இரும்பு, மண், நெல் மணிகள், பிரிமனை, மற்றும் பிற அரும்பொருட்கள் சேனாங்கல் பள்ளம், தாயம்பாளையம், ஓந்தனை, பேரூர் ஆகிய இடங்களிலிருந்து பெறப்பட்ட புதிய கற்காலக் கருவிகள் (Celts) குன்னத்தூரில் கிடைத்த மண் குவளை முதல் பெட்டியில் இடம் பெற்றுள்ளன.

பெரிய மேட்டுப்பாளையத்தில் புதையல் சட்டத்தின் கீழ் பெறப்பட்ட பெருங்கற்கால (Megalithic age) மண்தட்டுகள், குவளைகள், சதுமுகை என்ற இடத்தில் கிடைக்கப்பட்ட இரண்டு ஜாடிகள், அன்னமார் கோயிலில் (நடுப்பாளையம்) புதைகுழியில் கிடைக்கப்பட்ட நான்கு கால் ஜாடியும் அதனுள் இருந்த ஒரு இரும்பு அம்பின் கூரும் காட்சிக்காக அடுத்த பெட்டியில் வைக்கப்பட்டுள்ளன.

**வாள்**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 362/87 |
| கிடைத்த இடம் | : | கரட்டுப்பாளையம், கோபி வட்டம் |
| காலம் | : | கி.பி. 19-ஆம் நூற்றாண்டு |
| அளவு | : | நீளம் : 112 செ.மீ. |
| | | அகலம் : 4 செ.மீ. |

இந்த வாள் பாதுகாப்புடன் கூடிய கைப்பிடி உடையது. வாளின் கத்திப் பகுதி பிடியுடன் ஆணியால் தரைந்து பொருத்தப்பட்டுள்ளது. வாளின் முனை மேலிருந்து கீழ்வரை மெல்லியதாகக் காணப்படுகிறது. கைப்பிடியிலிருந்து வாளின் நுனிவரை மூன்று பள்ளங்கள் காணப்படுகின்றன.

# மானிடவியல்

மனித பண்பைக் குறித்த அறிவே மானிடவியல் ஆகும். மனிதன் காலத்தால் அடைந்த சில தேர்ச்சிகளால் இயற்கை பொருட்களைக் கைக்கொள்வதோடு, செயற்கைப் பொருட்களையும் செய்து கையாண்டு வந்தான். கல், எலும்பு, கொம்பு, மரம் ஆகியவற்றால் கருவிகள் செய்து பயன்படுத்தினான். இயற்கையில் கிடைக்கும் காய், கனி, கிழங்குகளைத் தின்றும் வேட்டையாடிய உயிர்களைப் புசித்தும், குகைகளிலும், மலைச்சரிவுகளிலும் வசித்தும் வந்தான். நாளாவட்டத்தில் வளர்ச்சி பெற்றான். சமூகங்கள் உருவாயின. தங்களது வாழ்விடத்திற்குத் தக்க மக்கள் அந்தந்த பெயர்களைப் பெற்றனர்.

பெரியார் மாவட்டத்தில் பவானி வட்டத்திலுள்ள பர்கூர் மலைப்பகுதிகளில் சோளகர்கள் என்னும் பழங்குடியினர் வசித்து வருகின்றனர். அவர்கள் பயன்படுத்தும் காட்டுக்கோழி வலை, உண்டைவில், வெட்டுக்கத்தி, கடப்பாறை போன்ற கருவி, சூலம், அகல்விளக்கு, சுரைக்குடுவை, மூங்கில் பாத்திரம், மூங்கில் முறம், மகுடி, புல்லாங்குழல், தப்பு, ஒத்து, தவில் போன்ற இசைக்கருவிகள் ஒரு காட்சிப் பெட்டியில் சோளகர்கள் வாழும் இயற்கைச் சூழலில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. பேரூர் பகுதியில் கிடைத்த இரண்டு சிறிய கிராமிய வெண்கலச் சிற்பங்களும், காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

பெரிய மேட்டுப்பாளையத்தில் புதையல் மூலம் கிடைக்கப்பெற்ற பெருங்கற்கால முது மக்கள் தாழி ஒன்று தனியாகக் காட்சிப்பெட்டியில் வைக்கப்பட்டுள்ளது.

சேலம், மற்றும் கோயம்புத்தூர் பகுதிகளிலிருந்து பெறப்பெற்ற மூன்று தோல் பாவைகள் காட்சியில் இடம் பெற்றுள்ளன. பொம்மலாட்டக்கலை கொங்கு நாட்டிலும் பரவி இருந்தது என்பது தெரிகிறது.



படிமக்காட்சிப் பெட்டியின் தோற்றம்



வரலாற்றுக்கு முற்பட்ட காலப்பொருட்களின் காட்சிப் பெட்டி

# இயற்கையியல்

*இயற்கை அறிவியலை மூன்று பகுதிகளாகப் பிரித்து காட்சிப் பொருட்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவை 1. புவியியல், 2. தாவரவியல், 3. பிராணியியல் என்பன.*

## புவியியல்

*பூமியைப் பற்றிய அறிவியலே புவியியல் ஆகும். இது பூமியின் பலவித தன்மைகளை அறிந்து கொள்ள உதவுகிறது. தாதுக்களும், பாறைகளும் ஒரு நாட்டின் வளத்தைப் பெருக்க உதவும் இயற்கையின் அன்பளிப்பாகும். புவியியலின் மிக முக்கியமான பகுதிகள் கீழ் வருமாறு:*

1. *தாதுக்களியல்* (Mineralogy)
2. *பாறையியல்* (Petrology)
3. *தொல்லுயிரியல்* (Palaeontology)
4. *பொருளாதாரப்புவியியல்* (Economic Geology)
5. *பொதுப்புவியியல்* (General Geology)

### தாதுக்களியல்

*தாதுக்களைப் பற்றிய அறிவியல் தாதுக்களியலாகும். கார்போனேட்டுகள், சிலிக்கேட்டுகள், சல்பேட்டுகள், பாஸ்பேட்டுகள், போன்ற தாதுக்கள் இந்த வகையைச் சாரும். புவியியல் காட்சிப் பெட்டியில் படிகக்கல், கேமடைட், மேக்னடைட் போன்ற ஆக்ஸைடு தாதுக்களும், ஜிப்சம் போன்ற சல்பேட் தாதுக்களும், பைரைட் போன்ற சல்பைடு தாதுக்களும், கால்ஸைட் போன்ற கார்போனேட் தாதுக்களும், பிளோரசோபைட், பயோடைட் போன்ற ஹைட்ரஸ் சிலிகேட் தாதுக்களும் இடம் பெற்றுள்ளன. கனிமங்களிலிருந்து உலோகங்கள் பிரித்தெடுக்கப்படுகின்றன. பெரியார் மாவட்டத்தில் படிகக்கல் பெருமளவில் கிடைக்கின்றது. இவை கண்ணாடி செய்ய பயன்படுகின்றன.*

## பாறையியல்

பாறைகளைப் பற்றிய அறிவியல் பாறையியலாகும். பாறைகள் எவ்விதமாக உருவாகின என்பதிலிருந்து அவற்றை மூன்று வகைப்படுத்தலாம். அவை அக்கினிப் பாறைகள் (Igneous rocks) படிவுப்பாறைகள் (Sedimentary rocks) உருமாறியப் பாறைகள் (Metamorphic rocks) ஆகும்.

கருங்கல், பெக்மடைட் போன்ற அக்னிப்பாறைகளும், 'காங்களாமெரேட்' மணல்பாறை, சுண்ணாம்புப் பாறை போன்ற படிவப் பாறைகளும், 'நைஸ்' போன்ற உருமாறிய பாறைகளும் காட்சியில் இடம் பெற்றிருக்கின்றன. பலதரப்பட்ட பாறைகள் கட்டிடங்கள் கட்டவும், சாலைகள் அமைக்கவும் பயன்படுகின்றன. பெரியார் மாவட்டத்தின் அந்தியூர், பர்கூர் பகுதிகளிலிருந்து கருங்கற்பாறைகள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன.

## தொல்லுயிர்ப் படிவங்கள் (Fossils)

பாறைகள் மத்தியில் இயற்கையாகவே புதையுண்ட பூர்வகாலத் தாவரங்கள் அல்லது பிராணிகளின் எச்சம் அல்லது பதிப்பே தொல்லுயிர் படிவம் எனப்படும். புதையுண்ட மேற்கூறிய பொருட்கள் கல்லாக மாறுகின்றன. இங்கு கல்லாகிய மரப்பகுதி, பெரியார் மாவட்டத்தில் கிடைத்த மிருகத்தின் எலும்புப் பகுதி, பெக்டன், கிரைபியா, எக்ஸோகைரா போன்ற சிப்பிகள் இடம் பெற்றிருக்கின்றன.

பொதுவாக பிளிஸ்டசீன் உருவாக்கங்கள் கிரஸ்டேசியஸ் படுக்கை களுக்கு மேலாக திருச்சிக்கு அருகில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. மேலும் கோரமண்டல கடற்கரைப் பகுதிகளில் பொவிடே, ஈக்யுடே வகுப்புகளைச் சார்ந்த தொல்லுயிர்ப் படிவங்கள் கிடைத்துள்ளன. ஆனால் பெரியார் மாவட்டத்தில் பொவிடே வகையைச் சார்ந்த தொல்லுயிர்ப் படிவங்கள் (எலும்பு) கிடைத்துள்ளன.

## தாடை எலும்பு

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 360187 |
| கிடைத்த இடம் | : | வெள்ளோடு, பெருந்துறை வட்டம், பெரியார் மாவட்டம். |



தாடை எலும்பு பற்களுடன் (தொல்லுயிர்ப் படிவம்)
பிளிஸ்டசீன் காலம் (2 மில்லியன் ஆண்டுகள்
வெள்ளோடு, பெருந்துறை வட்டம்



மட்குவளைகள்
கி. மு. 200 முதல் கி. பி. 200
சதுமுகை. பெருந்துறை வட்டம்

வெள்ளோடு அரசு உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் பள்ளிக்கு அருகில் குழி தோண்டியபோது இரண்டடி ஆழத்தில் தற்செயலாக இத்தொல்லுயிர்ப் படிவம் கிடைத்தது.

| | | | | |
|---|---|---|---|---|
| அளவு | : | நீளம் : | 12 | செ.மீ. |
| | | அகலம் : | 7 | செ.மீ. |
| | | கனம் : | 5 | செ.மீ. |
| | | எடை : | 225 | கிராம். |
| காலம் | : | பிந்திய பிளாஸ்டசீன் காலம் | | |

மாட்டினத்தைச் சேர்ந்த ஒரு விலங்கின் (பொவிடே) கீழ்த்தாடைப்பகுதி பற்களுடன் பாதுகாக்கப்பட்ட நிலையில் உள்ளது. கிழக்கும் பற்களின் கிரீடப்பகுதி தேய்ந்துள்ளது; எனினும் அதன் தளம் பாதுகாக்கப்பட்டுள்ளது. பற்கள் தேய்ந்துள்ளதிலிருந்து இது வயதான ஒரு விலங்கின் தாடையாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

**காலெலும்பு**

| | | |
|---|---|---|
| பதிவு எண் | : | 1/88 |
| கிடைத்த இடம் | : | சரவண கவுண்டன் வலசு, காங்கேயம் வட்டம். அமராவதி நதிக்கரையில் சுண்ணாம்பு படிவுக்கு மேல் ஒட்டிய நிலையில் கிடைத்தது. |
| அளவு | : | நீளம் : 29 செ.மீ. |
| | | அகலம் : 9 செ.மீ. |
| | | கனம் : 8 செ.மீ. |
| | | எடை : 1 கி.கிராம். |

இந்த தொல்லுயிர்ப் படிவ எலும்பு ஒரு விலங்கின் தொடை எலும்பாகும். இதுவும் ஒரு பொவிடே வகையைச் சார்ந்த ஒரு விலங்கைச் சார்ந்ததாகும். இதுவும் பிந்திய பிளிஸ்டசின் காலத்தைச் சார்ந்ததாகும். தாடை எலும்பை விட இது காலத்தால் முற்பட்டது.

காட்சிக் கூடத்தில் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் இலட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்து அழிந்து போன பிராண்டோசாரஸ், ட்ரைசெராடாப்ஸ், ட்ரச்சோடான் மற்றும் ஸ்டெகோசாரஸ் போன்ற இராட்சத விலங்குகளின் ஓவியங்கள் மிகப் பெரிய அளவில் தீட்டப்பட்டுள்ளன.

**ட்ரைசெராடாப்ஸ்**

இது 1100 இலட்சம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்து அழிந்துபோன கொம்புடைய இராட்சத விலங்கு. இது 20லிருந்து 25 அடி நீளமாயிருந்தது. தலையில் மூன்று நீளமான கொம்புகளுடன் கூடியது. தன்னைப் பாதுகாத்துக் கொள்ள இதனுடைய முதுகில் தகடுகள் போன்ற எலும்பின் அமைப்பும் இருந்தது.

**ட்ரச்சோடான்**

இது 1500 லட்சம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்து அழிந்து போன வாத்தின் அலகு போன்ற தட்டையும், அகலமுமான தலை அமைப்புடைய இராட்சத விலங்கு. இது 15 அடி உயரமுடையதும், பின் கால்களால் நிமிர்ந்து நடப்பதுமான விலங்கு.

**ஸ்டெகோசாரஸ்**

இது 1500 இலட்சம் வருடங்களுக்கு முன்பாக வாழ்ந்த இராட்சத விலங்கு. இதனுடைய முதுகில் கூர்மையான தகடுகள் போன்ற அமைப்பு இரு வரிசையாக இருந்தன. இத்தகடுகளில் பெரியது குறுக்களவில் இரண்டு அடி இருக்கும். இது 20 அடி நீளமும் 11 அடி உயரமுமானது. தூண்கள் போன்ற நான்கு கால்களால் நடந்தன. பின் கால்கள் முன் கால்களை விட நீளமானவை. இதனுடைய வாலில் வளைந்த கூர்மையான நான்கு நீளமான முட்கள் இருந்தன. இதனுடைய தலை சிறியது.

**ப்ரோன்டோசாரஸ்**

இது 1500 இலட்சம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்து அழிந்து போன இராட்சத விலங்கு. பருத்த உருவமும், நீண்ட கழுத்தும், வாலும், மரம் போன்ற கால்களும் உடையது. முன்னங்கால்கள், பின்னங்கால்களை விடக் குட்டையானவை. அக்காலத்தில் உள்ள இலை தழைகளைத் தின்று வாழ்ந்த பெருந்தீனி விலங்காகும்.

### பொருளாதாரப் புவியியல்

பொருளாதாரப் புவியியல் பொருளாதாரச் சம்பந்தமான புவியியல் பிரிவாகும். இப்பிரிவைச் சார்ந்த காட்சிப் பொருட்கள் பல காட்சிப் பெட்டியில் இடம் பெற்றுள்ளன. தொழிற்சாலைகளில் அதிக வெப்பத்தை தாங்கக் கூடிய உலைகளில் பயன்படுத்தக்கூடிய சயனைட், டால்க், மணற்பாறை, படிகக்கல் போன்றவை காட்சியில் வைக்கப்பட்டுள்ளன.

பெரியார் மாவட்டத்தில் படியூர் காங்கயம் பகுதிகளில் விலையேறப் பெற்ற கற்கள் கிடைக்கின்றன. கார்னீலியன், படிகக்கல், சந்திரக்கல் போன்ற குறை மணிக்கற்கள் காட்சியில் இடம் பெற்றுள்ளன.

### பொதுப் புவியியல்

பூமியின் அமைப்பு, ஆறு, பனிப்பாறைகள், கடல் சமுத்திரம் எரிமலை பாறைகள், எரிநட்சத்திர கற்கள், நில நடுக்கங்கள், சூரிய கிரகணம், சந்திரக் கிரகணம் போன்ற பொதுவானவற்றை பற்றிய புவியியலே பொதுப் புவியியலாகும்.

# தாவரவியல்

தாவரங்களின் உட்புற வெளிப்புறத் தோற்றங்கள், பூக்களின் அமைப்பு, பழங்கள், அவற்றில் விதைகள் அமைந்துள்ள முறை ஆகியவற்றைப் பற்றிய விளக்கங்களைக் கொண்டது தாவரவியல் ஆகும்.

**1. தாவர வடிவமைப்பியல் (Morphology)**

தாவரங்களின் வேர், தண்டு, இலை, பூ, காய், பழம் ஆகியவற்றின் தோற்றம் மற்றும் குணங்களை விளக்குவது வடிவமைப்பியல். எடுத்துக்காட்டாக 20 வித மரங்களின் கட்டைகளும், ஒரு சந்தன மரக்கட்டையும் காட்சியில் இடம் பெற்றுள்ளன.

**2. உயிர்த்தசைமவியல் (Histology)**

இது தாவரங்களின் இழை அமைப்பு குறித்தது ஆகும். இதில் உள்ளமைப்பு (Anatomy) மற்றும் உயிரணு அமைப்பு (Cell structure) ஆகிய இரு பிரிவுகள் உள்ளன.

**3. தாவர செயற்பாட்டியல் (Physiology)**

இது தாவரங்களின், சுவாசம், வளர்ச்சி, போன்ற செயற்பாட்டு முறைகளை விளக்குகின்றது.

**4. சுற்றுச் சூழமைப்பியல் (Ecology)**

இது தாவரங்களுக்கும் அவை வளரும் சுற்றுச் சூழலுக்கும் இடையேயுள்ள தொடர்பினை விளக்குகிறது. சுற்றுச்சூழல் காட்சிப் பெட்டி இடம் பெற்றுள்ளது.

**5. வகைப்பாட்டுத் தாவரவியல் (Systematic Botany)**

இது தாவரங்களை அறியும் முறை, அவற்றின் வகைபாடு, வெளிப்புறத் தோற்றத்தின் ஒற்றுமை, வேற்றுமை போன்றவற்றை எடுத்துக் காட்டுகின்றது.

**6. பொருளாதாரத் தாவரவியல் (Economic Botany)**

இப்பிரிவுத் தாவரங்கள் மனிதனுக்கு எந்தெந்த வகையில் பயன்படுகின்றன என்பதை விளக்குகிறது. எடுத்துக்காட்டாக நார்கள், நூல், பஞ்சு போன்றவை காட்சியில் வைக்கப்பட்டுள்ளன.



இயற்கையியல் காட்சிக்கூடத்தின் ஒரு பகுதி



முதலையும் வரகுக் கோழிகளும் சுற்றுச் சூழலியல்
காட்சிப் பெட்டியில்

# விலங்கியல்

விலங்கினங்களைப் பற்றி அறிய உதவும் அறிவியல் விலங்கியல் எனப்படும். அற்றுப் போன விலங்குகளும் இதில் அடங்கும். விலங்கினங்கள் நீந்துவன. ஊர்வன, பறப்பன, நடப்பன என்று பல வகைப்பட்டவை. 1/8000 அங்குல அளவுள்ள மலேரியா போன்ற நுண்ணுயிரிகள் முதல் 100 அடி நீளமுள்ள திமிங்கலங்கள் வரை பல வகையான விலங்கினங்கள் உலகில் பல பகுதிகளிலும் காணப்படுகின்றன. அவை, பல்வேறு சூழ்நிலையில் வாழுகின்றன. அவை வாழும் சூழ்நிலைகளுக்கேற்றவாறு உணவுப்பழக்கத்திற்கும், இயக்கத் திற்கும், இனப்பெருக்கத்திற்கும், சுவாசத்திற்கும், தட்பவெப்ப நிலைகளில் இருந்து பாதுகாத்துக் கொள்வதற்கும் தகவமைப்புகளைப் பெற்று உள்ளன.

விலங்கினங்களை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை. 1. முதுகெலும்பற்ற விலங்குகள், 2. முதுகெலும்புள்ள விலங்குகள். இப்பெரும் பிரிவுகள் விலங்குகளின் உடற்கூற்றுப்பண்புகளை அடிப்படையாகக் கொண்டு பல சிறிய பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

அமீபா, பாரமீசியம் போன்ற ஓரணு உயிரிகளும், கடற் பஞ்சுகளும், குழி உடலிகள், புழுக்கள், பூச்சிகள், சிப்பிகள், முட்தோல்களான நட்சத்திர மீன்கள் ஆகியவையும் முது கெலும்பற்ற விலங்குகளாகும்.

மீன்கள், ஈருடக வாசிகளான தேரைகள், தவளைகள், ஊர்வன, இனங்களான பல்லிகள், பாம்புகள், ஆமைகள், முதலைகள் ஆகியவைகளும் பறவைகளும், பெரிய உருவமுடைய பாலூட்டிகளான யானை, கரடி, புலி, சிங்கம், திமிங்கலம் மற்றும் மனிதனும் முதுகெலும்புள்ள விலங்கினங்களாகும்.

புரோட்டோசோவா தொகுதியில் ஒரு செல் உயிரிகள் சேர்க்கப் பட்டுள்ளன. இவ்வுயிரிகள் நுண்ணியதாகவும், எளிய அமைப்பைக் கொண்டதாகவுமுள்ளன. ஒரு செல் உயிரிகள் உலகின் எல்லாப் பாகங்களிலும் காணப்படுகின்றன. ஒரு செல் உயிரியிலிருக்கும் புரோட்டோபிளாசம் ஊட்டம், சுவாசித்தல், கழிவு நீக்கம், இடப்பெயர்ச்சி, இனப்பெருக்கம் முதலிய உயிர் செயல்களைச் செய்யும் திறன் படைத்துள்ளது. இதற்கென தனி அங்கங்கள் கிடையாது. அமீபா, பிளாஸ்மோடியம், பாரமீசியம் ஆகியவை ஒரு செல் உயிரிகளாகும்.

போரிபெரா தொகுதியில் கடற்பஞ்சுகள் சேர்க்கப்பட்டுள்ளன. இவை பல செல் உயிரிகளாகும். இவை ஒரு இடத்திலிருந்து வேறொரு இடத்திற்குச் செல்லாமல் பாறைகளில் அல்லது கடினமானப் பகுதிகளில் நிலையாக இருப்பவை. இவை உருவத்திலும் தோற்றத்திலும் மாறுபட்டுள்ளன. ஒரு மி.மீ. முதல் 2 மி.மீ வரையிலான குறுக்களவு உடையவை. இவற்றின் வண்ணங்களும் வேறுப்பட்டுள்ளன. பெரும்பான்மையானவை கடலில் வாழக்கூடியவை. சில இனங்கள் நன்னீரிலும் காணப்படுகின்றன. இவற்றின் உடலில் நுண்ணிய துளைகள் காணப்படுகின்றன. மேல் பகுதியிலுள்ள புழை பெரியதாக காணப்படும். உடல் சட்டகம் ஸ்பிக்யூல்ஸ் என்ற சுண்ணாம்புத் துகள்களால் ஆனது. உணவுப் பொருட்கள் உடலிலுள்ள நுண்ணிய துளைகள் வாயிலாக உணவுப் பாதைக்குக் கொண்டு செல்லப்படுகின்றன.

**குழியுடலிகள் (சிலேன்ட்ரேட்டா)**

குழியுடலிகள் பல செல்களால் ஆனவையாக இருப்பினும், நன்கு வளர்ச்சியுறாத திசுக்களையும் சிற்சில உறுப்புகளையும் மட்டுமே பெற்றுள்ளன. இதன் உடலின் மையத்தில் உள்ள குழிக்கு உணவுக்குழி என்று பெயர். வாய்த்துவாரம் மட்டுமே உள்ள இவ்வுயிரிகளுக்கு மலப்புழை கிடையாது. இவற்றில் பல உயிரிகளில் தன்னைக் காத்துக் கொள்ளக் கொட்டும் செல்களும் சிலவற்றில் அவற்றிற்குப் பதிலாக வாசோ செல்கள் என்றழைக்கப்படும் ஒட்டும் செல்களும் உள்ளன. இவற்றின் வாழ்க்கை வரலாற்றில், டா லிப் ஒரே இடத்தில் ஊன்றி நிற்கும் நிலையான வாழ்க்கையுடையவை . இவை மெடுசாக்களைத் தோற்றுவிக்க, மெடுசா அங்கும், இங்கும், நீந்தி செல்லக்கூடிய இயங்கும் வாழ்க்கையுடையவை. தொகுதி சிலேன்டரேட்டா மூன்று வகுப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை ஹைட்ரோசோவா, ஸ்கைபோசோவா, ஆந்தோசோவா ஆகும்.

**பார்பிடா**

இது ஒரு கூட்டுயிரி. இதில் கேஸ்ட்ரோசுவாயிடுகள், டேக்டைலோ - சுவாயிடுகள், கோனரேசுவாய்டுகள், மற்றும் நியூமடோபோர்களும் காணப் படுகின்றன. கேஸ்ட்ரோசுவாயிடுகள், உணவு உட்கொள்ளல், டேக்டைலோ சுவாய்டுகள் பாதுகாத்துக் கொள்ளல், கோனரேசுவாய்டுகள் இனவிருத்தி செய்தல், நியுமடோபோர்கள் மிதப்பதற்கு உதவுதல் போன்ற பணிகளில் ஈடுபடுகின்றன.

### ஜெல்லிமீன்

*இது விரிக்கப்பட்ட குடை போன்ற அமைப்பையுடையது. குடைக் கீழ்ப்பரப்பின் மத்தியில் நான்கு முனைகளோடு கூடிய வாய்த்துவாரம் உள்ளது. வாயைத் தொடர்ந்து உள்ள சிறிய வாய்க்கும், உடலுள் செவ்வகமான இரைப்பையாகின்றது. பல இன ஜெல்லி மீன்கள் சென்னை மற்றும் பாம்பன் கடற்பகுதிகளில் காணப்படுகின்றன. இது காட்சியில் இடம் பெற்றுள்ளது.*

### கோர்கோனியா (கடல் விசிறி)

*இது ஒரு வகை பவளத்தைச் சேர்ந்தது. இது ஒரு விசிறி போன்று காணப்படுவதால் கடல் விசிறி எனப்படுகிறது. இது கெராடின் என்ற பொருளால் ஆனது. கடல் விசிறிகள் பல்வேறு வண்ணங்களில் காணப்படுகின்றது.*

### மோட்ரிபோரா அல்லது மான் கொம்பு பவளம்

*இவை மிகப்பெரிய உருவத்தை கொண்டவை. உலகெங்கிலும் உள்ள இவை கூட்டுயிர் பவளம் படிவப் பாறைகளாக காணப்படுகின்றன. இவை மானின் கொம்பமைப்பை ஒத்திருப்பதால் மான்கொம்பு பவளம் என்றும் அழைக்கப்படுகிறது. இது காட்சியில் இடம் பெற்றுள்ளது.*

### அஸ்காரிஸ் லம்பரிகாய்டெஸ்

*இது ஒரு உருளைப் புழு அல்லது வட்டப்புழு. நாக்குப் பூச்சிகள் எனப்படும் இவ்வொட்டுண்ணி மனிதனின் சிறு குடலில் காணப்படும். மனிதனுக்குக் கேடு விளைவிக்கக்கூடிய ஒட்டுண்ணிகளில் இதுவும் ஒன்று. இது சுமார் 20 செ.மீ. வரை நீண்டு வளரும். இதன் இரு முனைகளும் கூர்மையாக உள்ளன. பெண் புழுவில் இதன் பின் முனை நேராகவும், ஆண் புழுவின் வயிற்றுப்புறமாக கொக்கிப் போன்று வளைந்தும் உள்ளது. பெண் புழு நாளொன்றுக்கு சுமார் 15,000 முட்டைகளிடும். முட்டைகள் மலத்தோடு வெளியேற்றப்படுகிறது. இம்முட்டைகள் நீரினாலோ, காற்றினாலோ, ஈக்கள் மலத்தின் மீது மொய்ப்பதினாலோ மனித உணவுடன் சேர்க்கப்படுகிறது. தவிர, நன்கு கழுவப்படாத பழங்கள், அசுத்தமான நீர் இவற்றை உட்கொள்ளுவதாலும், இவற்றின் முட்டைகள் மனிதனின் உணவுக் குழாய்க்குள் செல்கின்றன. முட்டைகளிலிருந்து கருப்புப் புழுக்கள் வெளிப்படுகின்றன. இவை*

குடலிலிருந்து வெளியேறி மனித உடலின் பல பாகங்களுக்குச் சென்று இதயத்தை அடைகின்றன. பிறகு, இதயத்திலிருந்து நுரையீரலை அடைந்து, தொண்டை வழியாக அங்கிருந்து உணவுக்குழலை அடைந்து, மீண்டும் சிறு குடலை அடைகின்றன. இவை வெளியேற்றும் நச்சுப் பொருட்கள் பல வியாதிகளுக்கு மூலக்காரணமாகின்றன. புழுக்கள் காட்சியில் இடம் பெற்றுள்ளன.

**வளைத்தசையுடலிகள் (அன்னலிடா)**

வளைத்தசைப் புழுக்கள், வெளித் தோற்றத்திற்கு வளையங்களைப் போலுள்ள பல கண்டங்களைக் கொண்டவை. நீரிஸ் புழு சீட்டோப்போடா வகுப்பைச் சேர்ந்தது. இது கடற்கரை ஓரங்களில் வளைகளில் காணப்படுகிறது. இது சுமார் 6 அல்லது எட்டு அங்குலம் நீளமானது. இதன் உடல் சுமார் 200 கண்டங்களைக் கொண்டவை. இவை ஓரிடத்திலிருந்து வேறொரு இடத்திற்குச் செல்லுவதற்கு உடற் சுவரிலுள்ள சீட்டோக்கள் அல்லது நுண்முட்டைகள் உதவுகின்றன. ஒவ்வொரு கண்டத்திலும் இரு கழிவு நீரகங்கள் அல்லது நெப்ரீடியாக்கள் உண்டு. இன உறுப்புகள் உடலறையின் உட்சுவரிலிருந்து வளர்கின்றன. ஆண், பெண் புழுக்கள் தனித்தனியாக உள்ளன.

**கணுக்காலிகள் (ஆர்தரபோடா)**

கணுக்காலிகள் அனைத்தும் இணைக்கப்பட்ட கணுக்கால் இணைப்பு உறுப்புக்களைக் கொண்டவை. கடினமான வெளித்தோல் கைட்டின் என்ற பொருளால் ஆனது. இனப்பெருக்க உறுப்புகளும் எப்பொழுதும் இரு பாலும் தனித்தேயிருக்கும். தேள்கள் உலகின் வெப்ப மண்டலப் பகுதிகளில் காணப்படுகின்றன. இவை இரவில் நடமாடும் பண்புடையவை. இவை கற்கள், மரப்பட்டைகள் ஆகியவற்றின் கீழும், சிறு பொந்துகளிலும் வாழ்கின்றன.

பெலாம்னேயஸ், பெய்காலன்சிஸ் என்ற ஏழு அங்குல நீளமுள்ள தேள் இந்தியாவின் வடபகுதிகளிலும் புதூஸ் என்ற மூன்று அங்குல நீளமுள்ள தேள் தென்னிந்தியாவிலும் காணப்படுகின்றன. பூச்சிகள், சிலந்திகள் தேளின் உணவாகும். ஆண், பெண் தேள்கள் தனித்தனியாக உள்ளன. தேள் முட்டையிடாது. குஞ்சு ஈனும் தன்மையுடையது. இக்குஞ்சுகள் பிறந்த பின்னும் தாய்த் தேள் தன் முதுகில் சில நாட்கள் அவற்றை சுமந்து செல்லும். இவை பலமுறை தோலுரித்துப் பின் முதிர்ந்த பருவத்தை அடைகின்றன. தேள்கள் காட்சியில் இடம் பெற்றுள்ளன.

### நண்டுகள்

நன்னீர் நிலைகளிலும் கடலிலும் காணப்படும் கணுக்காலிகள் நண்டுகளாகும். நண்டுகளும் கிரஸ்டேசியா வகுப்பைச் சேர்ந்தவை. நண்டு தட்டையான நீளமுள்ள குறுகிய உடலமைப்பைக் கொண்டது. உடலில் தலை, மார்பு, வயிறு என்ற மூன்று பகுதிகள் உள்ளன. தலை, மார்பு கண்டங்களின் முதுகுத் தகடுகள் ஒன்றிணைந்து அகன்ற முதுகுக் கேடயம் அல்லது முதுகு ஓடு அமைந்துள்ளது. ஆண் நண்டின் வயிற்றுப் பாகம் பெண் நண்டின் வயிற்றுப் பாகத்தைக் காட்டிலும் மிகவும் குறுகலானது.

துறவி நண்டு, கணுக்காலிகள் தொகுதியில், கிரஸ்டேசியா வகுப்பைச் சேர்ந்தது. இது காலியாக உள்ள சிறந்த சிப்பிகளின் கூட்டினுள் தன் உடலை நுழைத்துக் கொண்டு வாழ்கிறது. மென்மையான இதன் உடல் பாதுகாப்புடன் இருப்பதுடன் சிப்பியின் மேல் வளரும் கடற் பஞ்சுகளும் குழியுடலிகளும் பயனடைகின்றன. இவை கூட்டு வாழ்க்கை முறைக்கு ஒரு உதாரணமாகும். சென்னை மற்றும் பாம்பன் கடலோரப் பகுதிகளில் பல இனத்துறவி நண்டுகள் காணப்படுகின்றன. நண்டுகள் காட்சியில் இடம் பெற்றுள்ளன.

### பூச்சிகள்

பூச்சிகள் உலகம் முழுவதும் காணப்படுகின்றன. எல்லாப் பூச்சிகளுக்கும் ஆறு கால்கள் உண்டு. அவற்றின் உடலைத் தலை, மார்பு, வயிறு என்று மூன்று பிரிவாகப் பிரிக்கலாம். இவற்றின் தலையில் இரண்டு நீண்ட உணர் இழைகள் உள்ளன. பூச்சிகளுக்கு முதுகு நாண் கிடையாது. பூச்சிகள் அனைத்தும் முட்டைகள் இடுபவை. கரு வளர்ச்சி, முட்டை, புழு, கூட்டுப்புழு, முதிர்ந்த பூச்சி என்று நான்கு நிலைகளில் உருமாற்றமடைகிறது.

### வெட்டுக்கிளிகள்

வெட்டுக்கிளி, கிரிக்கெட், பிள்ளைப்பூச்சி, பாச்சை முதலியவை வரிசை ஆர்த்தாப்டிராவைச் சேர்ந்தவை. முன் இணை இறக்கைகள் கடினமாகவும் பின் இணையைவிட சிறியனவாகவும் இருக்கும். பின் இணைகள் சவ்வு போன்று மெல்லியதாகவும் விசிறி போன்று மடிக்கக் கூடியனவாகவும் இருக்கும். இவற்றின் முன்னங்கால்கள் உணவைப் பிடிக்கவும், பின்னங்கால்கள் குதித்துச் செல்வதற்கும் உதவுகின்றன.

காட்சியிலுள்ள வெட்டுக்கிளிகளின் வகைபாடு பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| வகுப்பு | : | இன்செக்டா |
| வரிசை | : | ஆர்த்தாப்டிரா |
| குடும்பம் | : | அக்ரிடிடே |
| துணைக் குடும்பம் | : | பிர்கோமார்பினே |
| | | பிசிலோசிரஸ் பிக்டஸ் |

**குளவிகள்**

எறும்புகள், தேனீக்கள், குளவிகள் முதலியவை வரிசை ஹைமினர்ப்டிரா வைச் சேர்ந்தவை. இரு இணை இறக்கைகளில் பின் இணை முன் இணையை விடச் சிறியவை. இவை சவ்வு போன்றிருக்கும். வாயுறுப்புகள் கடிக்கவும், உறிஞ்சவும் அமைப்பை உடையவை. வயிறு பொதுவாக குறுக்கப்பட்டிருக்கும். இதன் முதல் கண்டம் கடை மார்பு கண்டத்துடன் இணைந்திருக்கும். இவற்றில் சில இனங்கள் தனிமையிலும் சில இனங்கள் சமூக வாழ்க்கை வாழ்பவை. இவை கூடு அமைத்து வாழுந்தன்மையுடையவை.

சாட்சியிலுள்ள குளவிகள் மற்றும் தேனீக்களின் வகைபாடு பின்வருமாறு

| | | |
|---|---|---|
| வரிசை | : | ஹைறமனாப்டிரா |
| குடும்பம் | : | யூமெனிடே |
| 1. யூமெனெஸ் குடும்பம் | : | கோணிக்கா வெஸ்பிடே சிங்டா |
| 2. வெஸ்பா குடும்பம் | : | ஸ்பிஃஜிடே |
| 3. ஸ்பெஃக்ஸ் குடும்பம் | : | அம்புரோஸஸ் எவிடே |
| 4. க்னஸலோகோபா | : | டெனூயிஸ்கேபா |

**வண்டுகள்**

பூச்சிகளிலேயே மிகப் பெரிய தொகுதி வண்டுகளாகும். இதில் 2,80,000 சிறப்பினங்கள் உள்ளன. முன் இணை இறக்கைகள் கடினமாக இருக்கும். பின் இணை இறக்கைகள் சவ்வு போன்று உடலின் மீது மடிக்கக்கூடியதாக இருக்கும். வாயுறுப்புகள் கடிக்கும் வகையைச் சேர்ந்தவை. கால்கள் பொதுவாக நடப்பதற்கும், ஓடுவதற்கும் ஏற்றவை.

காட்சியிலுள்ள வண்டுகளின் வகைபாடு பின்வருமாறு :

வகுப்பு : இன்செக்டா
வரிசை : கோலியாப்டிரா
குடும்பம் : கராபிடே

1. அந்தியா : செக்ஸ்கட்டேடா
2. குடும்பம் : லூகானிடே
3. ஹெறக்ஸார்த்ரியஸ் டேலிஸோனி
   குடும்பம் : செராம்பிஸிடே
4. அகந்தோபோஃரஸ் செரடிகார்னிஸ்
   குடும்பம் : பஸாலிடே
5. பெலோபிடஸ் பர்மீஸ்டெரி
   குடும்பம் : ஸ்கரபாஸிடே
6. அரிக்டெஸ் நாசிகார்னிஸ்
   குடும்பம் : புப்ரெஸ்டிடே
7. ஸ்டேர்னோசிரா க்ரைசிங்

வண்ணத்துப் பூச்சிகளும், அந்துப் பூச்சிகளும் வரிசை லெப்பிடாப் டிராவைச் சேர்ந்தவை. இரு இணை சவ்வு இறக்கைகள் உடையவை: இறக்கைகளின் மீதுள்ள செதில்கள் இவற்றிற்கு அழகிய வண்ணத்தை அளிக்கின்றன. அந்துப் பூச்சிகள் கூட்டுப் புழுப் பருவத்தில் கூடு பின்னும் திறனுடையவை. வண்ணத்துப்பூச்சிகளால் அவ்வாறு பின்ன இயலாது. அந்துப்பூச்சிகளின் உணர் இழைகள் சிறைகைப் போன்ற அமைப்புடையவை. வண்ணத்துப் பூச்சிகளின் உணர் இழைகளின் முனைகள் குமிழ் போன்று இருக்கும். வண்ணத்துப் பூச்சிகள் பகலிலும், அந்துப் பூச்சிகள் அந்தி நேரங்களிலும் காணலாம்.

காட்சியிலுள்ள வண்ணத்துப் பூச்சிகள் மற்றும் அந்திப் பூச்சிகளின் வகைபாடு பின்வருமாறு :

**வண்ணத்துப்பூச்சிகள்**

வகுப்பு : இன்செக்டா
வரிசை : லெப்பிடாப்டிரா
குடும்பம் : பாப்பிலியோனிடே

1. பாப்பிலியோ பாலிடெஸ்
2. பாப்பிலியோ டெமோலியஸ்
3. கிராபியம் க்ளோயாந்தஸ்
4. கிராபிஃயம் டோஸன்
5. பாலிடேராஸ் கெக்டேர்

   குடும்பம் : பியெரிடே
6. இக்ஸியாஸ் மரியேன்
7. இக்லியாஸ் பைரின்
8. டெலியாஸ் யூகாரிஸ்
9. கொலோடிஸ் ஃபாஸ்டா ஃபுல்வியா
10. கேடாப்ஸிலியா க்ரோகேல்
11. சிபோரா நெரிஸ்ஸா
12. ஹிபோமோயா க்ளாசிப்பெ

    குடும்பம் : டனெய்டே
13. டனெய்ஸ் க்ரைஸிப்பஸ்
14. டனெய்ஸ் லிம்னியேஸ் மியுடினா
15. நுப்னியா கோள்கோர்

    குடும்பம் : அக்ரெய்டே
16. டெல்கினியா லயோலே

    குடும்பம் : நிம்பாஃலிடே
17. எர்கோலிஸ் மெரியோன் மெரியோன்
18. ப்ரெஸிஸ் அல்மானா
19. ப்ரெயிஸ் ஹயர்ட்டா
20. ப்ரெயிஸ் அரித்தியா
21. நெப்டிஸ்
22. ஹைப்போலின்மஸ் மிஸிப்பஸ்

**அந்துப் பூச்சிகள்**

வரிசை : லெப்பிடாப்டிரா

குடும்பம் : ஸொபிஞ்சிடே

1. அசிரான்ஷயா ஸ்டிக்ஸ்
2. தெரெட்ரா நெஸ்ஸங்
3. டாப்நிஸ் ஹைறபோதஸ்
4. புரோட்டாபார்ஸ் கன்வல்புலி

   குடும்பம் : நாக்டுப்டே

5. அபிஃஃடெரஸ் புஃஃலோணிகா

   குடும்பம் : கடுர்நிடே

6. அந்திரேயா செர்வியூலா

**மெல்லுடலிகள் (மொலஸ்கா)**

மெல்லுடலிகள் நன்னீர் நிலைகளிலும், நிலத்திலும், கடலிலும் காணப் படுகின்றன. இவற்றின் உடல், தலை, பாதம், மேண்டில் ஆகிய பகுதிகளை உடையது. உடற் சுவரின் மேல் பாகத்தில் மேண்டில் என்ற மெல்லிய மடிப்பு ஒன்று உள்ளது. இம்மேண்டிலிலுள்ள சில சுரப்பிகள் சுண்ண ஓடுகளைச் சுரக் கின்றன. இந்த ஓடுகள் உள் உறுப்புகளைப் பாதுகாக்கின்றன. மேன்டிலுக்கும், உள் உறுப்புத் தொகுதிகளுக்கும் இடையிலுள்ள இடத்திற்கு மேன்டில் உட் குழிவு என்று பெயர். இதில் செவுள்கள் அமைந்துள்ளன.

டோனேக்ஸ்ல், கார்டம் பைவால்வியா வகுப்பைச் சேர்ந்தது. இவை, கடலோர மணற்பகுதியில் ஒன்று அல்லது இரண்டு அங்குல ஆழத்தில் புதைந்துள்ளன.

கார்டியம் ப்ளேவம் கார்டிடே குடும்பத்தைச் சேர்ந்தது. மெட்ரிக்கஸ் வெனரிடே குடும்பத்தைச் சேர்ந்தது. இதுவும் கடலோர மணற் பகுதிகளில் மணலில் புதைந்து காணப்படுகிறது.

**சங்கு (சேங்கஸ் பைரம்)**

இது வயிற்றுக் காலிகள் என்ற கேஸ்ட் ரோபோடா வகுப்பைச் சேர்ந்தது. இது வாசிடே குடும்பத்தை சேர்ந்தது; இந்தியாவிலும், அந்தமானிலும் காணப்படுகிறது. ஆட்டின் கொம்பு போன்ற அமைப்புடைய இதன் முட்டைக்

கூட்டை கடலோர பகுதிகளில் காணலாம். சாதாரணமாக காணப்படும் சங்குகளில் கீழ்புறமுள்ள துளை வலப்புறம் அமைந்திருக்கும். இத்தகைய சங்கிற்கு இடம்புரிச் சங்கு என்று பெயர். வலம்புரி சங்கில் துளையானது பார்ப்பவரின் இடப்புறம் இருக்கும். வலம்புரிச் சங்குகள் அபூர்வமானதால் புனிதமானவையாக கருதப்படுகின்றன.

டர்போ இன சிப்பிகள் டர்பினிடே குடும்பத்தை சேர்ந்தவை. இவை இராவண முழி என்று அழைக்கப்படுகின்றன. இவை பாம்பன் கடலோரப் பகுதிகளில் காணப்படுகின்றன.

**டர்ரிடெல்லா**

டர்ரிடெல்லா டர்ரிடெல்லிடே குடும்பத்தைச் சேர்ந்தது. இதற்கு ஸ்குரு சிப்பி என்ற பெயரும் உண்டு. இது சேறான கடல் பகுதியில் காணப்படுகிறது. இதுவும் சென்னை, பாம்பன் கடலோரப் பகுதிகளில் காணப்படுகிறது.

**ஸ்ட்ரோம்பஸ் கனேரியம்**

ஸ்ட்ரோம்பஸ் கனேரியம் ஸ்ட்ரோம்பிடே குடும்பத்தைச் சேர்ந்தது. இது அழுகியவற்றை உணவாக உட்கொள்ளும். இதற்கு இறக்கைச் சிப்பி என்ற பெயரும் உண்டு. இது ஓரிடத்திலிருந்து வேறொரு இடத்திற்கு குதித்துக் குதித்துச் செல்லக்கூடியது.

**மூரெக்ஸ் ட்ரேபா**

மூரெக்ஸ்ட்ரேபா சிப்பிகளின் மேல் நீண்ட முட்கள் காணப்படுகின்றன. இவை மிக ஆழமற்ற கடற் பகுதிகளில் வாழுகின்றன. இவை முத்துச் சிப்பிகளை உணவாக உட்கொள்கின்றன.

**டோன்னோ டோலியம்**

டோன்னோடோலியம் வட்ட வடிவமான பெரிய சிப்பியை உடையது. இது கிழக்குக் கடற் பகுதிகளில் காணப்படுகிறது.

**பர்சா ஸ்பைனோசா**

பர்சா ஸ்பைனோசா பர்சிடே குடும்பத்தைச் சேர்ந்தது. இது பவளப் பாறைகளுக்கிடையே காணப்படுகிறது.

**ஒலிவா சிப்போசா**

*ஒலிவா சிப்போசா ஒலிடே குடும்பத்தைச் சேர்ந்தது. இச்சிப்பிகள் அழகிய வண்ண ஓடுகளை உடையவை. மணற்பாங்கான கடலினடியில் காணப்படுகின்றன.*

**நபானா மல்போசா**

*நபானா மல்போசா முயூரிசிடே குடும்பத்தைச் சேர்ந்தது. இது முத்துச் சிப்பிகளை உணவாக உட்கொள்கிறது.*

**பைகஸ் பைகஸ்**

*பைகஸ் பைகஸ் பைருலிடே குடும்பத்தைச் சேர்ந்தது. மணற்பாங்கான கடலினடியில் காணப்படுகிறது.*

**எமிபுயூசஸ் புஜிலினஸ்**

*எமிபுயூசஸ் புஜிலினஸ் வோபிலமிடே குடும்பத்தைச் சேர்ந்தது. மணற்பாங்கான கடற்கரையோரங்களில் இது காணப்படுகிறது.*

**முட்தோலிகள் (எக்கைஸனோடெர்மேட்டா)**

*இத்தொகுதியிலுள்ள உயிரிகள் அனைத்தும் கடலில் வாழ்வன. இவற்றின் உடலிலிருந்து செல்லும் ஐந்து ஆரப்பாதைகளிலும் உறுப்புகள் அமைந்துள்ளன. உடலின் நடுத்தோலிலிருந்து உண்டாகும் பல கெட்டியான சுண்ணாம்பு தகடுகள் தோலில் பொருத்தப்பட்டு ஓர் உட் சட்டமாக அமைந்துள்ளன. உறுப்புகளைச் சுற்றி ஒரு பெரிய குறு இழைச் செல்களுடன் கூடிய குழி உள்ளது. இது பல சிக்கலான மண்டலங்களை உள்ளடக்கியுள்ளது. அவற்றில் ஒன்று குழாய்களுடன் கூடிய நீர்க்குழாய் மண்டலமாகும். இதன் உதவியால் இடப்பெயர்ச்சி நடைபெறுகிறது. உடற்குழியிலிருந்து நீட்டப்பட்ட சிறு தோல் செவுள்கள் சுவாசித்தலுக்கு உதவுகின்றன.*

*நட்சத்திர மீன்கள் மணலும் பாறைகளும் நிறைந்த கடற் பகுதியில் வாழ்கின்றன. இவை நட்சத்திரம் போன்ற மையத் தட்டையும், அதிலிருந்து கிளம்பும் ஐந்து கைகளையும் உடையன. வாய்ப் பக்கமும், வாய் எதிர்ப்பக்கமும் தனித் தனியே இருக்கும். வாய் எதிர்ப் பக்கத்தில் மலவாயும், கற்சல்லடைத் தட்டும் அமைந்துள்ளன. குழாய்க் கால்களில் உறிஞ்சிகள் இருக்கும். உடலில் நுண் இடுக்கிகள் உண்டு.*

**முதுகு நாணுள்ளவை**

முதுகு நாணுள்ள உயிரியின் முதுகுப் பகுதியில் முதுகு நாண் தண்டு போன்ற அமைப்பைக் கொண்டுள்ளது. இது சில உயிரிகளில் வளர்ச்சிப் பருவத்திலும் சில உயிரிகளில் வாழ்நாள் முழுவதும் காணப்படுகிறது. இதுவே பெரும்பாலான உயிரிகளின் முதுகு எலும்பாகிறது. இவ்வுயிரிகள் முதுகெலும்பிகள் எனப்படும்.

**தேள் மீன்**

தேள் மீன் ஸ்கார்பினிடியா குடும்பத்தைச் சேர்ந்தது. இதன் துடுப்புகளும், செதில்களும் முட்களைக் கொண்டுள்ளன. முதுகுத் துடுப்பின் ஆரைகள் நச்சுச் சுரப்பிகளைக் கொண்டுள்ளன. இம்மீன் கடலின் ஆழமானப் பகுதிகளில் காணப்படுகிறது.

**உடும்பு**

உடும்பு ஊர்வன இன விலங்கு. இது இந்தியா, இலங்கை, பர்மா ஆகிய நாடுகளில் காணப்படுகிறது. இது ஒரு புலால் உண்ணி. சிறு பறவைகள், பறவைகளின் முட்டைகள், மீன்கள், நண்டு மற்றும் சிறு பாலூட்டிகளை உணவாக உட்கொள்ளும். இது தரையில் ஓடும்போது தன் வாலை மேல் நோக்கித் தூக்கிக் கொண்டு ஓடும். இதன் வாலும், காலிலுள்ள நகங்களும் நன்கு வளர்ச்சி பெற்றிருப்பதால் இது உறுதியாகப் பிடித்துக் கொள்ளும் தன்மையுடையது. இதன் தசை மருத்துவக் குணங்களை உடையது. சுமார் 25 முதல் 30 முட்டைகள் இடும். இதன் குட்டிகள் கரும் பச்சை நிறத்தில் புள்ளிகள் உடையனவாக இருக்கும்.

**ஓணான்**

ஓணான் தோட்டங்களில் சாதாரணமாகக் காணப்படுகிறது. பூச்சிகளும், புழுக்களும் இதன் உணவாகும். இனப் பெருக்க காலத்தில் ஆண் ஓணானின் தலை மற்றும் தொண்டைப் பகுதி இரத்த நிறமாக மாறுகிறது. இதனால் இது இரத்த ஓணான் என்று அழைக்கப்படுகிறது. இது வேனிற் காலத்தில் தரையில் குழி தோண்டி 4 முதல் 12 முட்டைகள் வரை இடுகிறது.

**முதலை**

முதலை சதுப்பு நிலத்திலும் ஆறுகளிலும் வசிக்கிறது. பறவைகள், சிறிய பாலூட்டிகள் இதன் உணவாகும். முதலை கரையோரங்களில் குழி தோண்டி சுமார் 20 முட்டைகள் வரை இடும். முதலைகள் இந்தியா முழுவதும் காணப்படுகின்றன. முதலைக் குட்டிகள் கூரிய பற்களினால் முட்டையை உடைத்துக் கொண்டு வெளிவருகின்றன. முதலை காட்சியில் உள்ளது.

**கடல் ஆமை**

ஆமைகளின் உடல் கெட்டியான பெட்டிப் போன்ற ஓட்டினால் மூடப்பட்டுள்ளது. முதுகின் மேல்புறமுள்ள ஓட்டிற்கு காரபேஸ் அல்லது மேல் ஓடு எனப்படும். வயிற்றுப் புறமுள்ள ஓட்டிற்கு பிளாஸ்ட்ரான் எனப்பெயர். உடலை இக்கூட்டிற்குள் இழுத்துக் கொள்ளும். ஆமைகள், இந்தியா இலங்கை அந்தமான் தீவுகளின் கடலோரப் பகுதிகளில் காணப்படுகின்றன. இதன் மேல் ஓடு கருமையானப் பழுப்பு நிறமாகவும் கீழ் ஓடு மஞ்சள் நிறமாகவும் உள்ளது. சிப்பிகளும் நண்டுகளும் எறாக்களும் இதன் உணவாகும்.

குளத்து ஆமைகள் கர்நாடகம், மகாராஷ்டிரம், தமிழ்நாடு பகுதிகளில் குளங்களிலும், ஏரிகளிலும் காணப்படுகின்றன. இவ்வகை ஆமை குட்டியாக உள்ளபோது இளம் பழுப்பு நிறமாகவும் முதிர்ச்சி அடைந்தவுடன் கருமை கலந்த பழுப்பு நிறமாகவும் காணப்படும். இதன் முட்டைகள் கடினமான ஓட்டை உடையவை. அவை நீளமாகவும் வெண்மையாகவும் இருக்கும். சூரிய வெப்பத்தினால் முட்டைகளிலிருந்து குட்டிகள் வெளி வருகின்றன. இவை ஊர்வன வகுப்பைச் சார்ந்தன. வரிசை கெலோனியா, குடும்பம் எனமடிடே.

**பறவைகள்**

பறவைகள் வெப்ப இரத்த விலங்குகள். இவற்றின் உடல் இறகுகளால் மூடப்பட்டுள்ளது. இவை பறப்பதற்கேற்றவாறு தகவமைப்புகளைப் பெற்றுள்ளன

**குருட்டுக் கொக்கு**

குருட்டுக் கொக்கு இந்தியா முழுவதும் நீர் நிலைகளுக்கருகில் காணப்படுகிறது. மீன்கள், தவளை, நண்டு, பூச்சிகள் இதன் உணவாகும். இவை கூட்டமாக கூடு அமைத்து வாழுகின்றன. புளியமரம், மாமரம் போன்ற பெரிய

மரங்களில் குச்சிகளால் மே முதல் செப்டம்பர் மாதங்களுக்குள் கூடுகள் அமைக்கப்படுகின்றன.

வரிசை : பால்கோனி பார்மஸ்

குடும்பம் : ஆக்ஸிபெட்ரிடே

**இந்திய வரகுக் கோழி**

இந்திய வரகுக் கோழி இராஜஸ்தான், குஜராத் பகுதிகளில் காணப்படுகிறது. இரண்டு அல்லது ஆறு பறவைகள் வரை சேர்ந்து காணப்படுகின்றன. தானியங்கள், இளந்தண்டுகள் இதன் உணவாகும். தவிர்க்க முடியாத நேரங்களில் மட்டும் இது பறந்து செல்கிறது. அழிந்து வரும் இனமானதால் இது சட்டத்தினால் பாதுகாக்கப்பட்டுள்ளது. காட்சியில் இடம் பெற்றுள்ளன.

**குறுநாரை**

குறுநாரை இந்தியா முழுவதிலும் காணப்படுகிறது. இது குருட்டுக் கொக்கின் அளவு உடையது. இது நீர் நிலைகள் இருக்குமிடங்களில் காணப்படுகிறது. தவளை, மீன், பூச்சி, சிப்பிகள் இதன் உணவாகும். ஜுன் முதல் செப்டம்பர் வரை இதன் இனப்பெருக்க காலம், இது சுமார் ஐந்து முட்டைகள் வரை இடும்.

**பூங்குருவி**

இது குளிர் காலத்தில் இந்தியா முழுவதிலும் காணப்படுகிறது. இப்பறவை காஷ்மீர், சிம்லா, திபேத் போன்ற இடங்களில் கூடு அமைத்து முட்டையிடுகிறது. பழங்களும், பூச்சிகளும் இதன் உணவாகும். இது சாதாரணமாக பாறைகள் நிறைந்த மலைப்பகுதிகளில் காணப்படுகிறது.

**சிறகி**

வரிசை : ஆன்சரிபார்மஸ்

குடும்பம் : அனாடிடே

சிறகி குளிர் காலத்தில் இந்தியா, பர்மா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு வலசை செல்லும் சிறிய வாத்தாகும். இதன் தலை மஞ்சள் கலந்த பழுப்பு நிறத்தில் இருக்கும். ஆண் சிறகியின் கண்ணின் பின்புறத்தில் பச்சை நிறப்பட்டை காணப்படுகிறது. இது நீர் நிறைந்த வயல்களிலும் சதுப்பு நிலங்களிலும் காணப்படுகிறது. பயிர்களின் இளம் தண்டுகள், நீர்த்தாவரங்கள், சிப்பிகள் மற்றும் புழுக்கள் இதன் உணவாகும்.

**ஆந்தை**

வரிசை : ஸ்டிரிஜிபார்மஸ்

குடும்பம் : ஸ்டிரிஜிடே

ஆந்தை இந்தியாவிலும், ஸ்ரீலங்காவிலும் காணப்படுகிறது. இது மனிதர்கள் வாழும் இருப்பிடத்திற்கு அருகில் பாழடைந்த பழைய கட்டடங்களில் வசிக்கும். இது இரவில் மட்டுமே சஞ்சரிக்கும் தன்மையுடையது. இது எலி, மூஞ்சுறு போன்றவற்றை உணவாகக் கொள்வதால் பயிர்கள் சேதமடைவதிலிருந்து காப்பாற்றுகிறது. இதன் தசையும், எலும்பும் மருத்துவக் குணம் கொண்டவையாக நம்பப்படுகிறது.

**பைரி**

பைரியின் முதுகுப் புறம் வெளிர் நிறமாகவும், வயிற்றுப் பகுதி வெண்மையாகவும் காணப்படுகிறது. மார்பு பகுதிகளிலும், வயிற்றுப் பகுதிகளிலும் பழுப்பு பட்டைகளும் வால் பகுதியில் கருப்புப் பட்டைகளும் காணப்படுகின்றன. இது மறைந்திருந்து திடீரென்று விரைவாக பாய்ந்து இரையைக் கவ்விச் செல்லும். பல்லி, எலி, தவளை, வெட்டுக்கிளிகள் மற்றும் சிறிய பறவைகள் இதன் உணவாகும். சிறிய பறவைகளை வேட்டையாட இதற்குப் பயிற்சியளிக்கப்படுகிறது.

**பழந்தின்னி வௌவால்**

வரிசை : கைராப்டரா

குடும்பம் : டெரோபிடே

பழந்தின்னி வௌவால் இந்தியா முழுவதும் காணப்படுகிறது. மா, வாழை, கொய்யா போன்ற பழங்கள் இதன் உணவாகும். எனவே இதனால் பழங்களின் உற்பத்தி பெரிதும் பாதிக்கப்படுகிறது. இது பெரும்பாலும் பனை ஓலைகளில் கீழ் பகுதிகளிலும், வாழை மரங்களிலும் தலை கீழாகத்தொங்கிக் கொண்டிருக்கும்.

## முடிவுரை

ஈரோடு அரசு அருங்காட்சியகம் ஒரு பல்நோக்கு அருங்காட்சியகமாகை யால் பல்வேறு பிரிவுகளை உள்ளடக்கி கள ஆய்வு, புதையல் சட்டம், நன்கொடை, வாங்குதல், மாற்றுதல் மூலம் அரும்பொருட்கள் சேகரிக்கப்பட்டு அவை பராமரிக்கப்பட்டு காட்சியிலமைக்கப்படுகின்றன. காட்சியிலமைக்கப் படாத அரும்பொருட்கள் சிறப்புக் கண்காட்சிகள் வழி மக்களின் பார்வைக்கு கொண்டுவரப்படுகின்றன. புதிய தகவல்கள் சிறப்புச் சொற்பொழிவுகள், விளக்கப் பயணங்கள், முகாம்கள் மூலம் மக்களுக்குத் தெரிவிக்கப்படுகின்றன. படக்காட்சிகள் மாணவர்களுக்கு காண்பிக்கப்படுகின்றன. பிற நிறுவனங் களுடன் இணைந்து, கலை, அறிவியல் தொடர்பான கண்காட்சிகள், பட்டறைகள், கருத்தரங்குகள் நடத்துகின்றது. புதிய கண்டுபிடிப்புகள், ஆய்வுச் செய்திகள் செய்தித்தாட்கள், ஆராய்ச்சி நூல்கள், கைப்பிரதிகள் வழி வெளியிடப்படுகின்றன. ஆய்வாளர்களுக்கும் மாணவர்களுக்கும் பொது மக்களுக்கும் பெரிதும் பயன்படும் இவ்வருங்காட்சியகம் பல்வேறு பயிற்சி களையும் நடத்தி வருகிறது. நமது பழம்பெருமையையும் கலைச் செல்வங் களையும் இயற்கைச் செல்வங்களையும் பாதுகாப்பதில் இவ்வருங்காட்சியகம் பெருந்தொண்டாற்றுகிறது.